ஸு

# த
# ர்
# ச
# ன
# ர்
# ப
# தி
# ல்

முதல் சதகம்

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாயநம:



மதங்கள்,சாஸ்திரங்கள்,
இலக்கியங்களில் வாசகர்களின்
108ஐயவினாக்களுக்குஆசிரியரின்
விளக்கங்கள்

ஆசிரியர்:–
ஸ்ரீ.கிருஷ்ணஸ்வாமிஅய்யங்கார்,M.A.B.L.,
அட்வகேட்,
ஆசிரியர்:– ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனம்,
3,புத்தூர்அக்ரஹாரம்,திருச்சி–620017.

ஸ்ரீ.ரா.ஸ்ரீ.கி.ஸ்ரீநிவாஸய்யங்கார்
தர்ம சொத்துக்களின் ஆதரவில்
வெளியிடப்பெற்றது.



விலை ரூ20/-

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கேள்வி - பதில்

## [விளக்கமளிப்பவர் ஸ்ரீஸுதர்சனர்]

## [முதல் பாகம்]

நம் பத்திரிகையைப் படித்துவரும் பலர், குறிப்பாக இளைஞர்கள், நமது மதவிஷயமாகத் தங்களுக்குப் பல ஸந்தேஹங்கள் உள்ளதாகவும், அவற்றிற்கு ஸுதர்சனத்தின் மூலமாக விளக்கங்கள் எழுதினால், தங்களுக்கும் உலகிற்கும் பயன்படும் என்றும் நீண்டநாளாகக் கேட்டு வருகின்றனர். அவர்களது வேண்டுகோளுக்கிணங்க இப்பகுதி ஸுதர்சனத்தில் தொடங்கப்படுகிறது.

நன்மைகள் பல விளையக்கூடிய இப்பகுதியால் தீமைகளும் சில விளைந்துவிடாமலிருக்கச் சில நியமங்களை நாம் கடைப்பிடிக்க வேண்டியுள்ளது. பொதுவாக வைதிக மதங்களைப் பற்றியும், குறிப்பாக ஸ்ரீவைஷ்ணவ மதத்தைப் பற்றியுமே இதில் அன்பர்கள் ஓரிரு வரிகளுக்குள் அடங்கும்படி சுருக்கமாகக் கேள்வி கேட்கவேண்டும். அன்பர்கள் தடைசெய்தாலல்லது, கேள்வி கேட்பவருடைய ஊரும் பெயரும் கேள்வியின் தலைப்பில் கொடுக்கப்படும். அவசியமானால் நாமே சில கேள்விகளைக் கேட்டுக் கொண்டு பதிலளிக்கவும் செய்வோம்.

தென்கலை வடகலைச் சண்டைகளை வளர்க்கவும், குறிப்பிட்ட சில நபர்களைத் தாக்குவதற்கும் கேட்கப்படும் கேள்விகளுக்கு நடுநிலையில் நின்று, அறிந்தவரையில் பதில் இறுப்போம். பதில்களில் ஏதேனும் தவறு இருப்பதைச் சுட்டிக் காட்டினாலும், நன்றியுடன் திருத்திக்கொள்வோம். மற்ற பத்திரிகைகளிற்போல், ஊர்வம்புகளையும், லௌகிக விஷயங்களையும்

பற்றிக் கேள்விகள் கேட்காமல், நம் மதம், சாஸ்திரம் முதலான வற்றில் தங்களுக்கு எழும் ஐயங்களைப் பற்றியே கேள்விகள் கேட்க வேண்டும். எல்லாக் கேள்விகளுக்கும் பதில் இறுக்க முடியாதாகையால், தங்கள் கேள்விகளுக்கு பதில் வரவில்லை என்று அன்பர்கள் குறைபட்டுக்கொள்ளக் கூடாது. நமது வேத சாஸ்திரங்கள் கடல் போன்றவையாகையால், யாமறிந்த விஷயங் களுக்கே பதிலிறுப்போம், இது விஷயமாகக் கடிதப் போக்கு வரத்துக்கள் வைத்துக்கொள்வதும் இயலாது. இனி, பல அன்பர்கள் நீண்ட நாட்களாக நம்மைக் கேட்டுவரும் சில கேள்வி களை நாமே கொடுத்து, அவற்றுக்கு பதிலளிப்பதின் மூலம் இப் பகுதியைத் தொடங்கி வைக்கிறோம்.

**1. அத்வைத மதம்தான் இந்துமதம் என்று பொதுஜனப் பத்திரிகைகளில் ஓர் பிரசாரம் செய்யப்பட்டு வருகிறதே. இது உண்மையா?**

இது பொய்பிரசாரமாகும். வேதாந்தக்கொள்கைகளில் அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம் என்றும், கடவுட் கொள் கையில் சைவம், வைணவம் என்றும் மற்றும் பல வகையாகவும் பிரிந்து நிற்கும் பல மதங்களின் சமூகம் நம்மை ஆட்கொண்ட வெள்ளையர்களால் இந்து மதம் என்று பெயர்சூட்டப்பட்டது. நமது பொதுஜனப் பத்திரிகைகளில் அத்வைதிகளின் கைமேலோங்கி யிருப்பதால் அத்வைதம் தான் இந்துமதம் என்னும் இப்பொய் பிரசாரம் அவைகளில் இடைவிடாமல் செய்யப்படுகிறது. உண்மைக்கு மதிப்பளிக்கும் பலம் இப்பொய்யை அம்பலப்படுத்த முன்வர வேண்டும்.

**2. பல மதங்களைப் பின்பற்றும் இந்துக்கள் ஒற்றுமையாய் இருக்க வழி என்ன? மதங்களை அழித்துவிடுவதே ஒற்றுமைக்கு வழி என்று சில அரசியல்வாதிகள் கூறுவது சரியா?**

அவ்வரசியல்வாதிகள் கூறுவதுபோல் மதங்களை அழித்து விட்டால், நாட்டில் எவனும் தெய்வத்திற்குப் பயந்து நடக்கமாட்டான்

ஆகையால், மனித இன வாழ்க்கை விலங்கின வாழ்க்கையாக மாறிவிடும். அத்வைதிகளைப் போன்ற மற்றும் சிலர் அத்வைதமே இந்து மதம்; எல்லோரும் அத்வைதிகளாக மாறிவிட்டால் ஒற்றுமை உண்டாகும் என்ற நினைத்துச் செயல்படுகிறார்கள். இதுவும் பொய்யின் அடிப்படையில் அமைந்ததாகையால், ஒற்றுமைக்கு வழிகோலாது; வேற்றுமைகளையே வளர்க்கும்.

ஆகையால், இந்து மதத்தின் பல பிரிவினரான சைவர் வைணவர், அத்வைதிகள், விசிஷ்டாத்வைதிகள் முதலான அனைவரும், பிற பிரிவினரிடம் சகிப்புத் தன்மையுடன், பொது மேடைகளிலும், பொதுஜனப் பத்திரிகைகளிலும் பிறமதங்களைப் பற்றி துஷ் பிரசாரம் செய்யாமல், தத்தம் மதக் கூட்டங்களிலும், பத்திரிக்கைகளிலும், தத்தம் மதப் பிரச்சாரம் செய்து வாழ்வதே ஒற்றுமைக்கு உண்மை யான வழியாகும்.

**3. அத்வைதிகள் எல்லா தெய்வங்களையும் தொழுவதுபோல், உண்மை வைஷ்ணவர்கள் விஷ்ணுவைத் தவிர வேறு தெய்வங் களைத் தொழுவதில்லையே. இது துவேஷ மனப்பான்மையல்லவா?**

பரம்பொருளான விஷ்ணுவைத் தங்கள் நாயகனாகவும், தங்களை அவனுடைய பத்தினிகளாகவும் நினைக்கவேண்டும் என்பது வைணவத்தின் அடிப்படைக் கொள்கை. இதனாலேயே வைணவர்கள் மற்ற தெய்வங்களைத் தொழுவதில்லை. இது துவேஷமாகாது. இவ்வடிப்படைக் கொள்கையை ஒப்புக் கொள்ளாத மற்ற மதத்தவர் எல்லா தெய்வங்களையும் தொழுவது மாத்திரம் பரந்த மனப்பான்மையாகிவிடாது.

எல்லா தெய்வங்களையும் தொழுபவர்களுடைய மதக் கொள்கையில் வைஷ்ணவர்கள் தலையிடுவதில்லை. அதுபோல், எம்பெருமான் ஒருவனையே தொழும் விரதம் பூண்ட வைஷ்ணவர் களின் கொள்கையையும் மதித்து, பிறர் அதில் தலையிடாமல் இருக்க வேண்டும். இதுவே ஒற்றுமைக்கும் எல்லா மதங்களும் வளரவும் வழிவகுக்கும்.

**4. அத்வைத மதத்தின் முக்கியமான கொள்கைகள் யாவை?**

வேறுபாடுகள் பலவற்றுடன் காணப்படும் இவ்வுலகம் பொய்த்தோற்றமேயாகும். ஒரு வேறுபாடுமற்ற அறிவு மாத்திர மேயான பரம்பொருள் ஒன்றே உண்மைப்பொருள். அநாதி கால மாக மாயையின் தொடர்பால் இப்பரம்பொருள் மறைக்கப் பட்டிருக்கையால், உலகமாகிற பொய்த்தோற்றம் ஏற்படுகிறது. ஜீவர்கள் அனைவரும் அந்த ப்ரஹ்மமேயாவர். ஜீவனையும் ப்ரஹ் மத்தையும் ஒன்றாகக்கூறும் வேதவாக்யங்களின் பொருளை அறிவதால், அந்த ப்ரஹ்மமேயாவதுதான் மோக்ஷம் - என்பது அத்வைதம்.

**5. த்வைத மதத்தின் முக்கியமான கொள்கைகள் யாவை?**

ஸ்வதந்த்ரனான நாராயணனே பரப்ரஹ்மம். சேதனரும், அசேதனமுமான மற்றவையெல்லாம் அவனுக்குப் பரதந்த்ரமாய், அவனிலும் மிகவும் வேறுபட்டிருப்பவை. ஆத்மாக்களிடையே இவ்வுலகிலும், மோக்ஷலோகத்திலும் ஆண் பெண் முதலான பேதங்களும், அது காரணமாகவரும் ஆனந்தத்தில் ஏற்றத்தாழ்வும் உண்டு. பரப்ரஹ்மமான நாராயணனிடம் பக்தி செய்து திரும்பி வருதலில்லாத பரமபதம் சென்று ஆனந்தமடைவதே மோக்ஷம் - என்பது த்வைதம்.

**6. விசிஷ்டாத்வைத மதத்தின் முக்கியமான கொள்கைகள் யாவை?**

ஸ்ரீமந் நாராயணனே இவ்வுலகைப் படைத்து அளித்து அழிக்கும் பரம்பொருள். எல்லாவுலகிலும் உள்ள சேதனர், அசேத னம் ஆகிய மற்றவையெல்லாம் அவனுக்கு *ஶரீ*ரமாய் *ஶே*ஷமா யிருப்பவை (அடிமைப்பட்டவை). அவன் *ஶரீ*ரியாய், *ஶே*ஷியா யிருப்பவன். அவனே ஜீவர்களுக்கு மோக்ஷோபாயமாகவும், உபேயமாகவும் ஆகிறான். பக்தி முதலான உபாயாந்தரங்களைக் கொண்டு, பல ஜன்மங்கள் முயற்சி செய்தபின் ப்ராரப்தகர்மத்தின் முடிவில் அர்ச்சிராதி கதியாலே பரமபதம் சென்று அவனை

அடைந்து இன்புறுவது சிறந்த மோக்ஷம். அல்லது அவனையே உபாயமாகக் கொள்ளுவதாகிற ஶரணாகதியினால், அவனது நிர்ஹேதுக கிருபைக்கு விஷயமாகி, இந்த ஜன்மத்திலேயே எல்லாக் கர்மங்களும் கழியப்பெற்று, அர்ச்சிராதி கதியாலே பரம பதத்தில் அவனையடைந்து, அவனுகப்புக்கேயான பரம அநுபவ கைங்கர்யங்களைப் பெறுவது தலைசிறந்த மோக்ஷம் என்பது விஶிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ மதம்.

V. ராமமூர்த்தி, துறையூர்

**7. சைவ விசிஷ்டாத்வைதம் என்னும் மதம் உண்டா?**

இத்தகைய மதம் என்றும் இருந்ததில்லை. விசிஷ்டா த்வைத ஸ்ரீவைஷ்ணவ மதத்திற்குப் போட்டியாக ஓர் மதத்தை ஏற்படுத்த வேண்டும் என்னும் எண்ணத்துடன் ஸ்ரீராமாநுஜரின் ஸ்ரீபாஷ்யத்தைக் காப்பியடித்து ஸ்ரீகண்டபாஷ்யம் எனும் நூல் சுமார் 500 வருஷங்களுக்குள் எழுதப்பட்டது. அதற்கு சிவார்க்கமணி தீபிகை என்று வ்யாக்யானம் எழுதிய அப்பயதீக்ஷிதர் ஓர் அத் வைதி. இன்றளவும் அந்த நூலை எவரும் பின்பற்றுவதாகத் தெரிய வில்லை. ஆகையால் அப்படி ஒரு மதம் கிடையாது.

R. சுந்தரம், சென்னை–86.

**8. ஆதிசங்கரர் சைவ ஸித்தாந்தியா அல்லது வைணவ ஸித்தாந்தியா?**

அத்வைதத்தை ஸ்தாபித்த ஆதிசங்கரர் தம் பாஷ்யங் களில் விஷ்ணுவையே ஸகுணப்ரஹ்மமாகக் காட்டியிருக்கிறார் என்பதை நாம் *சங்கரரும் வைணவரும்* எனும் நூலில் எதிரிட்டவர் களும் வாய் திறக்க முடியாதபடி நிலைநாட்டி உள்ளோம். சிவன் முதலான தேவதைகள் பரமாத்மாவல்லர் என்றும் கீதாபாஷ்யம் முதலான வற்றில் கல்வெட்டாகக் காட்டி இருக்கிறார்.

ஆதிசங்கரர் பிற்காலத்தில் குறிப்பாக அப்பயதீக்ஷிதர் காலம் முதல் அத்வைதிகளில் பெரும்பான்மையினர் சைவர்

களாக மாறினர். ஆயினும், இன்றும் வைஷ்ணவர்களான அத் வைதிகள் பலர் உள்ளனர்.

V. *ஸ்ரீநிவாஸன், திருச்சி–17.*

**9. த்வைதத்தில் சைவம் வைஷ்ணவம் என்னும் பிரிவு உண்டா?**

த்வைதிகள் அனைவரும் விஷ்ணுவைப் பரம்பொருளாகக் கொண்ட வைஷ்ணவர்களே. ஆயினும் விசிஷ்டாத்வைதி (ஜ்ஞானி) களைப்போல் அவர்கள் மறந்தும் புறந்தொழாதிருப்பவர்கள் அல்லர். மோக்ஷம் தவிர்ந்த பலன்களுக்காக மற்ற தெய்வங்களை யும் வழிபடுகின்றனர்.

S. *வேங்கடம், சமயபுரம்.*

**10. ராமாயண காலத்தில் திருமண் அணியும் பழக்கம் இல்லை. அது பின்னர் ஏற்பட்டது. ராமர் அணிந்தது திருநீறுதான் என்று ஒரு சொற்பொழிவில் [தினமணி 28.6.76] வாரியார் கூறுவது உண்மையா?**

ஆதாரமில்லாத அண்டப்புளுகுகளை அள்ளி வீசுவதில் வல்லவர் வாரியார் என்பதற்கு இது மற்றுமொரு சான்று. மிகப் பழமையான வால்மீகி ராமாயணத்தில் திருமண் அல்லது நீறு அல்லது வேறு அந்த நெற்றிக்குறிபற்றியும் பேச்சே இல்லை. கம்பராமாயணத்தில் இராமன் திருநாமம் இட்டுக் கொண்டதாக உள்ளது. ஸ்ரீராமனைப் பற்றிய நூற்றுக் கணக்கான பழைய நூல் களில் எதிலுமே அவன் நீறுபூசியதாக இல்லை. இது வாரியாரின் பிரம்மாண்ட புளுகுகளில் ஒன்று.

*ஒரு வைஷ்ணவன் (விலாசமில்லை)*

**11. சென்னை – 12, அருணா பதிப்பகத்தார் வெளியிட்டுள்ள கதிரைவேற்பிள்ளை இயற்றிய "சுப்பிரமணியபராக்ரமம்" என்னும் நூலில் விஷ்ணுவை இழிவுபடுத்தும் பல கதைகள் இருப்பதைப் படித்தீர்களா?**

இப்படி ஆயிரக்கணக்கான அபத்தமான பொய்க்கதைகள் பிற்காலத்தில் சைவர்களால் கற்பிக்கப்பட்டுள்ளன. சங்க நூல் கள், காளிதாஸன் முதலானோரின் வடமொழிக் காவியங்கள் முதலான பழைய நூல்களில் அக்கதைகளில் ஒன்று கூட எடுக்கப்படாததிலிருந்து அவற்றின் பொய்ம்மையை உணரலாம். இவற்றைப் படிப்பதில் பொன்னான பொழுதைப் பாழ்படுத்த வேண்டாம்.

S.K. *ராமராஜன், மயிலாப்பூர்*

**12. விநாயகரும் விஷ்வக்ஸேனரும் ஒருவர்தானா? "*ஶுக்லாம் ப₃ரத₄ரம்*" ச்லோகத்திற்குப் பொருள் என்ன?**

பாஞ்சராத்ரம் முதலான வைஷ்ணவ ஆகமங்களில் விஷ் வக்ஸேனர் பரமபத்தில் எழுந்தருளியிருக்கும் பர வாஸுதேவனின் சேனைத்தலைவராகக் கூறப்பட்டுள்ளார். அவருடைய கிங்கரர் களில், சிங்கத்தலையையுடைய ஸிம்ஹானனரும், யானைத் தலையை உடைய கஜாநநரும் உண்டு. இவர்கள் நித்யஸூரிகள். பெரியதிருமுடியடைவு முதலான குருபரம்பரை நூல்களில், நாதமுனிகள் கஜாநநரின் அம்சம் என்றும், ஆளவந்தார் ஸிம்ஹாந நரின் அம்சம் என்றும் கூறியிருப்பதையும் காணலாம். இந்த கஜாநநரே விஷ்ணுகோயிலில் பரிவாரதேவதையாகக் காணப்படுபவர்.

பாரதத்தை எழுதுவதற்காக ஒரு தந்தத்தை ஒடித்துவிட்டு, ஏகதந்தராக சிவன் கோயிலில் காட்சியளிக்கும் (சிவனின் பிள்ளையான) பிள்ளையார் வேறானவர். இவருடைய உத்பத்தி யைப் பற்றி சிவபுராணங்களில் ஆபாஸமான பல கதை கள் காணப்படுகின்றன. சங்க நூல்களில் சிவனின் பிள்ளையாக முருகன் ஒருவனே எடுக்கப்படுகிறானே ஒழிய, பிள்ளையார் எங்குமே எடுக்கப்படவில்லை. இதிலிருந்து சைவப் பிள்ளையார் பிற்காலக்கற்பனையே என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

"வெள்ளை வஸ்திரம் அணிந்தவரும், சந்திரன் போன்ற நிறத்தவரும், நாலுகைகளை உடையவரும், தெளிந்த முகத்தை

உடையவருமான விஷ்ணுவை எல்லா இடையூறுகளும் நீங்கும் பொருட்டு தியானிக்க வேண்டும்'' என்பது **ஶுக்லாம் ப₃ரத₄ர** ச்லோகத்தின் பொருள். இந்த ச்லோகத்தில் க்ருதயுகத்தில் பால் போலும், சந்திரன் போலும் வெளுத்த நிறத்தையுடைய விஷ்ணு வர்ணிக்கப்படுகிறார். ***விஷ்ணும், சதுர்புஜம்*** என்னும் பதங்களி லிருந்து இது ஐங்கரனான பிள்ளையாரைப் பற்றியதல்ல என விளங்குகிறது.

**13. சிவன் நினைத்தபோது வைகுந்தம் போய்வர முடியுமா?**

"*தாமஸ: பரஸ்தாத்*" "*ரஜஸ: பராகே*" என்று வேதங்களில் ப்ரக்ருதி மண்டலத்திற்கு அப்பாற்பட்டதாகக் கூறப்படும் விஷ்ணுவின் பரமபதத்தினுள் பிரமன், சிவன் முதலான ஸம்ஸாரி ஜீவர்கள் எவரும் நுழையமுடியாது. மோக்ஷமடைபவர்கள் மாத்திரமே அதினுள் செல்லலாம். அவர்கள் ப்ரக்ருதி ஸம்பந்தம் பெற்று திரும்பி வரவும் மாட்டார்கள். ப்ரக்ருதி மண்டலத்தினுள் திருப்பாற்கடல் முதலானவற்றில் எம்பெருமான் வ்யூகமூர்த்தியாக எழுந்தருளியிருக்கும் இடங்களில் வைகுண்டம் என்பதுண்டு. இவற்றில் ஸநகர் முதலான ரிஷிகளுக்கும், பிரமம், சிவன் முதலான தேவர்களுக்கும் போக்குவரத்து இருந்ததாகப் புராணங்கள் பேசுகின்றன.

**14. ஸ்ரீமந் நாராயணன் தன் காரியத்திற்காகக் கைலாஸம் போய்வருவது உண்டா?**

ஸ்ரீமந் நாராயணன் இவ்வுலகப் பலன்களை ஸம்ஸாரி களுக்கு வரமாகக் கொடுக்கும் சக்தியை சிவனுக்கு அளித்திருக் கிறான். "*இந்த சக்தி எனக்கு உண்டென்று ஜனங்கள் நம்புவதற் காக, நீ மனிதனாக அவதரிக்கும் போது என்னிடம் இவ்வுலகப் பலன்களைப் பெற்றுப் போக வேண்டும்*" என்று சிவன் எம்பெருமானை வேண்ட, எம்பெருமானும் அப்படியே வரமளித்த தாகப் புராணங்கள் கூறுகின்றன. அம்முறையில், கண்ணன் பிள்ளை வரம் வேண்டிக் கைலாஸ யாத்திரை செய்ததாகவும், அப்போது பார்வதியோடு கூடிய சிவன் கண்ணனை அடிபணிந்து

**"கள்வா! எம்மையும் ஏழுலகும் நின் உள்ளே தோற்றிய இறைவ"** என்று கண்ணனைத் துதித்ததாகவும்ஹரிவம்சம் கூறுகிறது.

*24.6.76 குமுதத்தில ஒரு கேள்வி பதில்*
*எஸ். உமாசங்கர், மாராடி.*

**15. இராவணன், சூரபத்மன் இரணியன் முதலிய அசுரர்கள் அனைவரும் சைவர்களாகவே படைக்கப்பட்டிருக்கிறார்கள். வைணவ அசுரர்களே கிடையாதா?**

அரசு பதில் : இருக்கிற சர்ச்சைகள் போதாதென்று இது வேறா.

ஸுதர்சனர் பதில் : வைணவ அசுரர்களும் ஒரு சிலர் இருக் கிறார்கள். பிரஹலாதனும், விபீஷணனும் உலகறிந்த உதாரணங் கள். ஆனால் அசுரரும், அரக்கரும் வைஷ்ணவர்களானால் அவர் களிடம் அசுரத்தன்மையும், அரக்கத்தன்மையும் இருக்காது என்பது இதிஹாஸ புராணங்களில் பிரசித்தம். பிரமன், சிவன் முதலான மற்ற தெய்வங்களிடம் பக்தி செய்து வரம் வாங்கிய இரணியன், இராவணன், திரிபுராசுரர்கள், பஸ்மாஸுரன் முதலா னோர் அசுரத்தன்மை நீங்கப்பெறாதவர்களாய் உலகைத் துன்புறுத்தினார்கள் என்பதற்கும் இதிஹாஸ புராணங்களில் ஏராளமான சான்றுகள் உண்டு.

*24.6.76 குமுதத்தில் மற்றொரு கேள்விபதில்*
*கே. சிராஜுதீன், மணக்கால்.*

16. இராவணனை மிகமிக நல்லவனாகச் சித்தரித்துக் காட்டும் "ஆச்சாரிய இராவணா" என்ற நாடகம் சமீபத்தில் ஒலிபரப்பானதே கேட்டீர்களா?

அரசு பதில் : இனி ஆசாரிய கோட்ஸே என்று ஒரு நாடகம் அரங்கேறினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஸுதர்சனர் பதில் : அரக்கர் அசுரர்களெல்லாம் சிவ பக்தர்

களாய் இருப்பதைக் கண்டு திகைப்புற்ற சிலர், சில நூற்றாண்டு களுக்கு முன்னர் *ஆனந்த ராமாயணம்* போன்ற சில ராமாயணங் களை எழுதினர். அதில் ராவணனை நல்லவனாகவும் சீதைக்குத் தகப்பனாகவும் கதைகட்டினார்கள். ஆசார்ய ராவணா நாடகமும் அத்தகைய முயற்சிகளில் ஒன்றேயாகும்.

V. *ஸ்ரீநிவாஸன், திருச்சி–17.*

**17. சைவத்துக்கும், வைணவத்துக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் என்ன? இவ்விரு மதங்களும் ஒற்றுமையாயிருக்க வழியுண்டா?**

இரு மதங்களும் வேதத்தை ப்ரமாணமாகக் கொள்கின்றன என்பது முக்கியமான ஒற்றுமை. சைவம் சிவாகமங்களையும் தாமஸமான சைவபுராணங்களையும் ப்ரமாணமாக ஒப்புக் கொள்கிறது. வைஷ்ணவம் பாஞ்சராத்ர வைகாநஸாகமங் களையும் ஸாத்விகமான வைஷ்ணவம் *சித், அசித், ஈச்வரன்* என்று மூன்று தத்துவங்களை ஒப்புக்கொள்வதுபோல் சைவமும் *பதி, பசு, பாசம்* என்னும் மூன்று தத்துவங்களை ஒப்புக்கொள்கிறது.

அசேதன தத்துவங்களை முப்பத்தாறாகப் பிரிக்கிறது சைவம். இருபத்துநாலாகப் பிரிக்கிறது வைஷ்ணவம். லோகவேத ப்ரஸித்தரான மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்டவனான சதா சிவனைப் பரம்பொருளாகக் கொள்கிறது சைவம். மும்மூர்த்தி களில் ஒருவனான விஷ்ணுவையே பரம்பொருளாகக் கொள்கிறது வைஷ்ணவம். சங்க நூல்களைப் பார்த்தால் வைஷ்ணவமே வைதிகமதமாக அக்காலத்தில் விளங்கிற்று என்று தெளிவாகிறது. பிற்கால நூல்களைப் பார்த்தால் சிறிது சிறிதாக வைஷ்ணவத் தோடு சைவம் போட்டியிடத் தொடங்கிற்று என்று தெளிவாகிறது. இப்படிப் போட்டியில் பிறந்து போட்டியில் வளர்ந்ததாகையாலே, விஷ்ணுவை மிகவும் இழிவுபடுத்தும் மனப்பான்மையையும், வைஷ்ணவத்திற்கு இடையூறு இழைக்கும் மனப்பான்மையையும் சைவத்தில் அதிகரித்துக்கொண்டே வருகிறது. விஷ்ணுவுக்குப் போட்டியாக சிவனைக் கொண்டுவந்து அத்துடன் நில்லாமல்,

சிவனுக்குப் போட்டியாக மனைவியான சக்தியையும் பிள்ளை களான கணபதியையும், முருகனையும் சொல்லும் நிலைக்கு வளர்ந்து, *ஶா*க்தம், காணபத்யம், கௌமாரம் முதலான பல பல மதங்களாக வளர்ச்சிபெற்றுவிட்டது சைவம். வைஷ்ணவம் போட்டியில் பிறவாத அநாதி மதமாகையாலே இதில் லக்ஷ்மி க்குக்கூடத் தனிமதம் கிடையாது. சிவனுக்கும் பார்வதிக்கும், சிவனுக்கும் மோகினிக்கும், ரிஷிபத்தினிகட்கும் உடலுறவை ஒப்புக்கொள்கிறது சைவம். முருகன் சாஸ்தா முதலானோரை சிவனுக்கு ஸ்த்ரீகளோடு தொடர்பு ஏற்பட்டு வீர்யம் விழுந்ததாலே பிறந்த பிள்ளைகளாக இதிஹாஸ புராணங்கள் பேசுவது காணத்தக்கது. அப்ராக்ருத னாகையாலே, விஷ்ணுவுக்கு எந்த ஸ்த்ரீயோடும் ப்ராக்ருதமான உடலுறவையும் வீர்யம் விழுதலை யும் வைஷ்ணவம் ஒப்புக் கொள்வதில்லை.

பல கோபிகளோடு குரவைக் கூத்தாடிய கண்ணனையும் புராணங்கள் அஸ்கலித நித்ய ப்ரஹ்மசாரியாகவே கூறுவதையும், விஷ்ணுவின் பிள்ளையான பிரமன் அவனுடைய நாபீகமலத்தி லிருந்தே பிறந்தான் என்று வேத*ஶா*ஸ்திரங்கள் கூறுகின்றனவே யொழிய லக்ஷ்மியின் வயிற்றிலிருந்து பிறந்ததாகக் கூறுவதில்லை என்பதையும் காணவேணும். இப்படிப் பலவேற்று மைகள் இருந்த போதிலும் இரு மதங்களும் மிகவும் நெருங்கியவை என்பதையும், இரு மதங்களும் ஒற்றுமையாக வாழ்ந்தால்தான் ஆஸ்திகம் வளரும் என்பதையும் எவரும் மறுக்க முடியாது. ஆனால் அவ்வொற்றுமை பரஸ்பர ஸஹிப்புத் தன்மையின் அடிப்படையில் அமையமுடியுமேயொழிய, ஒன்றை யொன்று விழுங்கி ஏப்பமி டப்பார்க்கும் சமரசத்தின் அடிப்படையில் அமையமுடியாது. இதை நம்நாட்டு பொதுஜனப் பத்திரிகைகள் உணரவேண்டும்.

P.S. *ரங்கராஜன், சத்யமங்கலம்.*

**18. கல்கியில் வெளிவரும் சேரமான்காதலியில் கண்ண தாசன் சரித்திரச்சான்றுகளுக்கு முரணாகக் குலசேகரரைச் சைவராகச் சித்தரித்துத் தொடர்கதை எழுதிவருவதைக் கண்டித்து யான்**

**எழுதியுள்ள கடிதத்தின் நகலை அனுப்பியுள்ளேன். அதை ஸுதர்சனத்தில் வெளியிடுவீர்களா?**

ஸுதர்சனமும், ப்ரியாவும் கண்டித்த பின்பும், சாண்டில்யன் போன்ற தலைசிறந்த சரித்திர நாவலாசிரியர்கள் இப்பிழையை எடுத்துக்காட்டிய பின்பும், சிறிதும் நேர்மையில்லாமல் கண்ணதாசன் பொய்க்கதை எழுதுவதையும், அதை கல்கி வெளியிட்டு வருவதை யும் மேலும் கண்டிப்பது செத்த பாம்பை அடிப்பது போன்றது.

*ப. ரங்கராஜன், திருமலை.*

**19. காமகோடி சங்கராசாரியர் வேதம் படித்தவர்களை சைவர் வைஷ்ணவர் என்னும் வித்தியாசமில்லாமல் ஆதரிக்கிறார். நமது சம்பிரதாயத் தலைவர்கள் அப்படி ஆதரிப்பது இல்லை, ஆகையால் வைஷ்ணவர்களும் அவரை ஆ*ஶ்*ரயிக்க வேண்டி வருகிறதே? இதற்கு என்ன சொல்லுகிறீர்கள்?**

உறுதியிருந்தால், காமகோடியை ஆ*ஶ்*ரயிக்காமலே வேத வித்யையைக் கொண்டு பிழைப்பு தேடிக்கொள்ளலாம். அவ்வளவு உறுதியில்லாவிடில், பல வைஷ்ணவ வேத வித்வான்கள், தங்களிட முள்ள வேத வித்யையை ஆதரிப்பதைக் கருதிக் காமகோடியை அண்டினாலும், நமது மதத்திற்கு துரோகம் செய்யாமல் வாழ் கிறார்களே! அப்படியாவது இருக்கலாம்.

நமது மதத் தலைவர்கள் வேதவித்வான்களை ஆதரிப் பதில்லை என்னும் குற்றச்சாட்டு முழு உண்மையல்ல. ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி பலவகை களில் வேதம் படித்தவர்களை ஆதரிக்கிறார். மற்ற மாடதிபதிகளும் அவரைப் பின்பற்றினால் காமகோடி சங்கராசார்யரை வைஷ்ண வர்கள் ஆ*ஶ்*ரயிக்க வேண்டிய அவசியமில்லா மலிருக்கும் என்பது உண்மை.

V. *ஸ்ரீநிவாஸன், திருச்சி–17.*

**20. *ப*க்தி தத்துவ விஷயத்தில் ஸ்ரீவைஷ்ணவத்திற்கும்**

**ஶாக்தத்திற்கும் உள்ள வேறுபாடுகள் எவை?**

சைவத்தின் வளர்ச்சிகளில் ஒன்றான ஶாக்தம், பராசக்தியைப் பரம்பொருளாக ஒப்புக்கொள்கிறது. இந்தப் பராசக்தி சைவர்கள் கூறும் சதாசிவனுக்கும் மூலமாயிருப்பவள் என்கிறார்கள். சைவத்தில் "சிவன் பெரியதா சக்தி பெரிதா" என்று ஏற்பட்ட வாதம் காலக்ரமத்தில் இப்படிப் பராசக்திவாதமாகப் பரிணமித்தது. ஶாக்தர்கள் வேதம் போல் கொண்டாடும் தேவீபாகவதத்தை த்ரிமதஸ்தர்களான ஆசார்யர்களில் எவரும் தொட்டதில்லை. ஐந்நூறு வருஷங்களுக்குள் ஏற்பட்ட நூல் இது.

வைஷ்ணவத்தில் ஶக்திகளுக்கெல்லாம் மேலான ஶக்தியாக ஸ்ரீதேவி ஒப்புக் கொள்ளப்படுகிறாள். ஆனாலும், அவளையும் உடையவன் நாராயணனேயாகையால் பரம்பொருள் அவனேயாவான். ஶாக்தத்தில் ஶக்தியைப் போலல்லாமல், இந்த ஸ்ரீதேவி கருணையே வடிவெடுத்தவளாகவும், கோபமென்பதையே அறியாதவளாகவுமிருப்பவள். இன்றும் நற்குணங்கள் நிரம்பிய பெண்ணை "மஹாலக்ஷ்மிபோல் இருக்கிறாள்" பெண்களுக்குத் தகாத குணங்கள் நிறைந்த பெண்ணை "மஹாகாளிபோல் இருக்கிறாள்" என்றும், சைவ வைஷ்ணவ விபாகமற அனைவரும் கூறுவது காணத்தக்கது.

**21. ஸ்ரீவைஷ்ணவ பூர்வாசாரியர்களுக்கு முற்காலத்தில் ஸ்ரீராமாயணத்துக்கு வ்யாக்யானம் ஏற்பட்டது உண்டா?**

'*உடாரி*' என்பவர் ஸ்ரீராமாயணத்துக்கு வியாக்கியானம் செய்திருப்பதாக நம்பிள்ளை ஈட்டிலிருந்து தெரிகிறது. ஸ்ரீராமாயணத்தில் யுத்தகாண்டத்தில் காணப்படும் "*ஆதித்ய ஹ்ருதயம்*" உடாரியினால் வியாக்கியானம் செய்யப்படாமையாலே, அது இடைச்செருகலாகவே இருக்கவேண்டும் என்று ஸ்ரீராமாயணத்துக்கு வியாக்கியானம் செய்தவர்களில் அதிப்ரஸித்தரான கோவிந்தராஜர் கூறுகிறார். இந்த கோவிந்தராஜர் பூர்வாசார்யர்களுக்குப் பிற்பட்டவர். 16ஆவது நூற்றாண்டில் இருந்தவர். அதிமேதாவியாகவும், ஸ்ரீவைஷ்ணவோத்தமராகவும் இருந்தவர்

என்பது அவரது வியாக்கியானத்தை ஸேவிப்பவர்களுக்குப் புலப்படும்.

T.D.*ரங்கராமாநுஜ ஐயங்கார், திருப்பாப்புலியூர்.*

**22. அறநிலைய இலாகாவின் ஆதரவில் வெளியிடப்படும் திருக்கோயில் பத்திரிகையில் கிருபானந்தவாரியாரின் கந்தபுராணக் கட்டுரையில் சகிக்கமுடியாத விஷ்ணு தூஷணங்கள் வெளி வருவதைப் பார்த்தீர்களா?**

"எந்தப்புளுகும் கந்தபுராணத்தில்" என்று பெயர் பெற்ற புராணத்தை அண்டப்புளுகர்களில் தலைவரான வாரியார் விளக்கி எழுதும்போது வேறு எதை எதிர்பார்க்க முடியும்? பல வருஷங் களுக்கு முன் 'கல்கி' பத்திரிகையில் விரிவாகக் கண்டித்திருக் கிறோம். பொய்யைப் பலகால் சொல்லி வந்தால் உண்மையாகி விடும் என்று நினைத்து வாரியார் இப்படி எழுதுகிறார். நடுநிலை வகிக்கவேண்டிய அறநிலைய இலாகாப் பத்திரிகை இதற்கு இடமளிப்பது மிகவும் வருந்தத்தக்கது. நூற்றுக் கணக்கில் வைணவர்கள் ஆட்சேபக் கடிதங்களை ஆணையர், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34 என்னும் விலாசத்துக்கு எழுதினால் விமோசனம் பிறக்கலாம்.

J. *ராமாநுஜம், ஈரோடு–7.*

**23. சமீபத்தில் இவ்வூரில் நடந்த இராமாயணக் கருத்தரங்கில் "வால்மீகி கண்ட இராமன்" என்னும் தலைப்பில் உரையாற்றிய அக்னிஹோத்ரம் இராமாநுஜதாத்தாச்சாரியார், வால்மீகி தன் காவியத்தில் மோக்ஷத்தைப் பற்றிக் கூறவில்லை என்று அடித்துக் கூறினார். இது உண்மையா?**

ஸ்ரீராமாயணத்தில் ஜடாயு மோக்ஷம், சபரீமோக்ஷம் என்னும் ப்ரகரணங்கள் உள்ள விஷயம் சிறுவர்களுக்கும் தெரியும். '*அபராவர்த்திநாம்....அநுத்தமாந் லோகாந் கச்ச*' (ரா-ஆ 68-30) (திரும்பி வருதலில்லாதவர்களுடைய தலை சிறந்த உலகத்தை

அடைவாய்) என்று ஸ்ரீராமபிரான் ஜடாயுவுக்கு அருளுகிறார். மோக்ஷலோகத்தை இதைவிடத் தெளிவாக எப்படிச் சொல்ல முடியும்? '*கமிஷ்யாம்யக்ஷயாந் லோகாந்*' (ரா.ஆ 74-13) (அழிவில்லாத உலகத்தை அடைகிறேன்) என்கிறாள் சபரி..." '*தமஸ: பரமோ தாதா*' (ரா-யு 114-15) என்னும் மண்டோதரி வாக்யத்திலிருந்தும், '*தஸ்மாத் பாவாத் ஸநாதநாத்.... விஷ்ணுத்வமுப ஜக்மிவாந்*' (ரா.உ. 104-9) என்னும் நான்முகன் வாக்யத்திலிருந்தும், '*தமஸ்*' எனப்படும் இருள்தருமாஞாலமான ப்ரக்ருதி மண்டலத்திற்கு அப்பாற்பட்ட நித்யமான பரமபதத்திலிருந்து அவதரித்தவன் ஸ்ரீராமன் என்றும், இவ்விடமே மோக்ஷலோகம் என்றும் தெளிவாக விளங்கும் '*நதேவலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே*' (ரா-அ 31-5) முதலான இடங்களில் மரணமின்மையாகிற மோக்ஷம் பற்றிய பேச்சு வந்துள்ளது. ஈரோட்டில் பேசிய பெரியார் (ராமாநுஜ தாத்தாச்சாரியார்) இவற்றை அறியாதவர் என்றோ, அறிந்தும் பணம், புகழ், விருது முதலானவை கருதி இவற்றை மறைப்பவர் என்றோ விளங்குகிறது.

V. *ஸ்ரீநிவாஸன்*

**24.1.8.1976 ஹிந்துவில் அக்நிஹோத்ரம் ராமாநுஜ தாத்தாசாரியார் "*வகுளாபரண சடகோபர்*" என்னும் நம்மாழ்வார் பற்றிய புத்தகத்தை விமர்சனம் செய்யும்போது பல விபரீதங்களை எழுதியிருப்பதைப் பார்த்தீர்களா?**

1. நம்மாழ்வாரின் சீடரான மதுரகவி "*வேதம் தமிழ் செய்த மாறன்*" என்று நம்மாழ்வார் வேதங்களைத் தமிழ்ப்படுத்தின விஷயத்தைக் கூறுகிறார் என்று எழுதியுள்ளார். கண்ணிநுண் சிறுத்தாம்புத் தனியனிலுள்ள தொடரை மதுரகவியாழ்வாருடைய வாக்காக மயங்கிய இவரைக் கண்டு அழுவதா அல்லது சிரிப்பதா என்று விளங்கவில்லை.

2. நம்மாழ்வாரைப் பற்றி அவர்காலத்தில் ஏற்பட்ட எந்த ரிக்கார்டும் கிட்டவில்லை என்று எழுதுகிறார். இதிலிருந்து சீடரான

மதுரகவி அருளிய கண்ணிநுண் சிறுத்தாம்பையே காணாதவர் இவர் என்று விளங்குகிறது.

3. ஆளவந்தார் முதலானார் செய்த தனியன்களே, ஆசார்யர்கள் நம்மாழ்வாரிடம் ஈடுபட்டதற்கு ஆதாரமாக எடுக்கப் படுகின்றன என்கிறார் இவர். மாதாபிதா என்னும் ஶ்லோகம் வெறும் தனியனல்ல, ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ர ரத்னத்தில் உள்ளது என்பதைக்கூட அறியாதவர் இவர் என விளங்குகிறது.

4. ஆழ்வார் பாடல்கள் வேதத்தைக் காட்டிலும் சிறந்தவை என்பதற்கு ஆசிரியர் பெயர் தெரியாத (anonymous) நூலிலிருந்து ஓர் சரித்திரம் எடுக்கப்படுகிறது என்று கடைசியில் எழுதுகிறார். "*செய்யதமிழ் மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே*" என்று வேதாந்த தேஶிகரே அருளியுள்ளதை அறியவில்லையா, அல்லது அறிந்தும் மறைத் தாரா என்பது விளங்கவில்லை. ஸ்ரீகாஞ்சி மஹாவித்வான் ஸ்வாமி யின் *த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்*" "அக்நிஹோத்ரியும் வைணவமும்" போன்ற நூல்களில் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவ ராலும் மறுத்தொழிக்கப்பட்ட வாதங்களையே திருப்பியெழுது வதன் மூலம் தமது வைஷ்ணவ த்வேஷத்தை வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளும் இவரைப் போன்றவர்களைக் கொண்டு வைணவ நூல்களை விமர்சனம் செய்விப்பதன் மூலம் "ஹிந்து" பத்திரிகை தன் தரத்தை மிகவும் தாழ்த்திக்கொள்கிறது. S.V. வரதராஜ அய்யங்கார் ஸ்வாமி போன்ற நல்ல விமர்சகர்கள் எத்தனையோ பேர் இருக்கும்போது, வைஷ்ணவத்தையே அறியாத (காலஞ்சென்ற) A.V. சுப்பிரமணிய அய்யரையும், இவரையுங்கொண்டு வைணவ நூல்களை ஹிந்து விமர்சனம் செய்விப்பது மிகவும் அருவெறுக்கத்தக்கது.

25. 17-8-76 "ஹிந்து" வில் திருமூலரின் திருமந்திரம் பற்றிய விமர்சனத்தில், தமது திருமந்திரநூலில் திருமூல நாயனா ரால், ஆண் பெண் உடலுறவே பர்யங்க [படுக்கை] யோகம் என்னும் ஒருவகை யோகமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது என்று

எழுதப்பட்டுள்ளது. ஆண் பெண் உடலுறவு யோகாப்யாஸமாக முடியுமா? திருமூல நாயனார் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்றும், அவரே முதன் முதலில் சைவ சித்தாந்தம் என்னும் சொல்லை உபயோகித் திருக்கிறார் என்றும் விமர்சகர் அருணாசலம் எழுதியிருப்பது பற்றி விளக்க வேண்டுகிறேன்.

கீதை முதலான ஸாத்விக சாஸ்த்ரங்களில் ஆத்மாவையோ, அல்லது பரமாத்மாவையோ அடைவிக்கும் வழிகளான அஷ்டாங்க யோகமும், கர்மஜ்ஞாநபக்தி யோகங்களுமே யோகம் எனப்படு கின்றன. ஆண்பெண் உடலுறவு தேஹத்தில் பற்றை வளர்க்கக் கூடியதாகையாலே ஆத்ம ப்ராப்தி ஸாதனமான யோகாப்யாஸத் திற்குத் தடையாகவே முடியும் என்று கீதை எட்டாம் அத்யாயத்தின் தொடக்கத்தில் '*கர்ம*' *ஶப்*தத்தாலும் யதிச்சாந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி (கீதை 8-10) என்னுமிடத்திலும் காட்டப்பட்டது.

பகவானைப் பெற விரும்பி பக்தியோகம் செய்யும் உபாஸ கனுக்கும் யோகாப்யாஸகாலம் தவிர்ந்த மற்ற காலங்களிலேயே விஹித விஷயமான தன் மனைவியிடம் உடலுறவு அனுமதிக்கப் பட்டிருக்கிறது. ப்ரபந்நனுக்கும், அநந்ய போக்யத்வமாகிற (பகவானைத் தவிர வேறு எதையுமே இனியதாகக் கொள்ளாமை யாகிற) ஸ்வரூபத்துக்குப் பொருந்தாமையாலே, விஹித விஷய மான தன் மனைவியிடமும் உடலுறவு கொள்ளாமலிருப்பது என்று பிள்ளையுலகாசிரியர் நிர்ணயித்தார். இது வைணவத்தின் நிலை.

சைவத்தில் சிவனுக்குப் பெண்களோடு உடலுறவு ஒப்புக் கொள்ளப்படுகையால் சிவனடியார்களுக்கும் ஆண்பெண் உடல் உறவு பர்யங்கயோகம் என்னும் யோகமாகக் கொள்ளப்பட்டு உள்ளது என்று திருமூலர் திருமந்திரத்திலிருந்து விளங்குகிறது. சைவத்திலும், சாக்தத்திலும் ஆண்பெண் உடல் உறவை முக்கிய மாகக் கொண்ட வாமாசாரமுறை இன்றளவும் இருப்பதாகக் கூறுகிறார்கள். இவற்றிலிருந்து உலகம் வளர்வதற்காக, எம் பெருமான் சிவனைக் கொண்டு உடல் உறவை முக்கியமாகக் கொண்ட சைவமதத்தை ஏற்படுத்தியிருக்கிறார் என்றும், இவ்வுலகி

லிருந்து வெளிப்பட்டு அப்ராக்ருதமான பரமபதத்தை அடைய விரும்புகிறவர்களுக்கு, உடலுறவைப் படிப்படியாகக் கட்டுப் படுத்திக் கடைசியில் விலக்கிப் பரமாத்மாவையோ, அல்லது தன் ஆத்மாவையோ அடையும் வழிகளைக்காட்டும் வைஷ்ணவ மதத்தை ஏற்படுத்தியிருக்கிறான் என்றும் விளங்குகிறது.

திருமூலரின் பாடல்களின் நடையைக் காணும்போது, சம்பந்தருக்கும், அப்பருக்கும் பிற்பட்டவரே அவர் என்று தோன்று கிறது. ஆகையால் அவர் அவர்களுக்கும் முற்பட்ட ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராயிருக்க இடமில்லை. ஆனால் கால ஆராய்ச்சியில் எவராலும் முடிவாக எந்த நிர்ணயமும் செய்ய முடிவதில்லை. ஆகையால், அதில் அதிகமாகச் சர்ச்சையில் ஈடுபடுவதில் பயன் இல்லை. சிவனைப் பரம்பொருளாகக் கொள்ளும் சைவசித்தாந்தம் சங்ககாலத்திற்கு மிகப்பிற்பட்டது என்பது சங்க இலக்கியங்களை ஆராய்ந்தால் தெளிவாக விளங்கு கிறது. திருமூலரே முதன் முதலில் சைவசித்தாந்தம் என்னும் சொல்லை உபயோகிக்கிறார் என்று ஸ்ரீ.M.அருணாசலம் எழுதி யிருப்பது இதை வலியுறுத்துகிறது.

*பெயர் வெளியிட விரும்பாத நபர்.*

**26. பிராம்மணனின் லக்ஷணங்கள் எவை?**

ப்ரஹ்ம அநதீதி ப்ராஹ்மண: என்னும் வ்யுத்பத்தியின்படி ப்ரஹ்ம ஸம்பந்தம் பெற்றவன் ப்ராஹ்மணன். ப்ரஹ்மசப்தம், வேதங்களையும் பரப்ரஹ்மத்தையும் குறிக்கும். ஆக, எவனொருவன் வேதாத்யயனம் செய்திருக்கிறானோ, அல்லது எவன் ஒருவன் ப்ரஹ்ம ஜ்ஞாநம் உள்ளவனோ, அவன் ப்ராஹ்மணன் என்று பொருள்படுகிறது. இக்காலத்தில் பெரும்பாலான ப்ராஹ்மணர் களுக்கு இந்த லக்ஷணம் இல்லை. ப்ராஹ்மண ஜாதியில் பிறந்த ஒருவனுக்கும், அந்த ஜாதியில் பிறந்த ஒருத்திக்கும் பிறந்தவன் ப்ராஹ்மணன் என்பதையே லக்ஷணமாகக் கொண்டு லோக வ்யவஹாரம் நடக்கிறது.

**27. பிராம்மணன் மதம் மாறலாமா?**

வேதத்தை ஒப்புக்கொண்டு அதன்படி நடப்பவனே ப்ராஹ்மணனாகையால், வைதிகமான மதங்களிடையே ப்ராஹ்மணனுக்கு மதமாற்றம் நிகழலாம். அவைதிக மதத்திற்கு ஒரு ப்ராஹ்மணன் மாறினால் அவன் ப்ராஹ்மணன் ஆகமாட்டான். நாராயணன் பரமாத்மா என்பதையே அறியாத ப்ராஹ்மணன் ப்ராஹ்மணக் கழுதையேயாவான் என்று ரிஷிகள் கூறுவதும் இங்கு கவனிக்கத் தக்கது.

**28. சமயம் என்பது மோக்ஷஸாதனமா? அல்லது வயிறு வளர்க்கத் தக்கவாறு வேஷம்போட உதவும் ஸாதனமா?**

மோக்ஷஸாதனம் என்பதே உண்மை. ஆனால் "*உத்தர நிமித்தம் பஹுக்ருதவேஷ:*" என்கிற ரீதியில் சிலர் சமயத்தை சமயத்துக்குத் தக்கவாறு மாற்றிக்கொண்டு வேஷம்போட்டு வயிறு வளர்க்கிறார்கள். இவர்கள் கண்டதே காட்சி, கொண்டதே கோலம், உண்டதே போகம் என்னும் கொள்கையுடையவர்களாகவே கருதப்படுவர்.

**29. ஒரு உலகாசாரியரின் லக்ஷணங்கள் எவை?**

ஶாஸ்த்ரங்களின் உண்மைப் பொருளைத் தான் ஆராய்ந்து அறிந்து, அதன்படி நடந்து, பிறரையும் அதன்படி நடக்கச் செய்பவன் ஆசார்யன். இத்தகையவன் உண்மையான சாஸ்த்ர ஜ்ஞானமுடைய அனைவராலும் கொண்டாடப்படுகிறவனாய், உலகனைத்துக்கும் நன்மையை விரும்புகிறவனானால் லோகாசார்யனாகிறான்.

**30. மனத்திற்குள் சக்தி உபாஸகனாகவும், வெளி வேஷத்தில் சைவனாகவும், விவகாரத்தில் வைஷ்ணவனாகவும் இருக்க வேண்டும் என்று சிலர் கூறுவது ஏற்கக் கூடியதா?**

மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம் |
மநஸ்யேகம் வசஸ்யேகம் கர்மண்யேகம் மஹாத்மநாம் ||

(மனத்திலும், வாக்கிலும், காரியத்திலும், வெவ்வேறுபட் டிருப்பது துஷ்டர்களின் லக்ஷணம். முற்கூறிய முக்கரணங்களிலும் ஒருபடிப்பட்டிருப்பது மஹாத்மாக்களின் லக்ஷணம்) என்னும் வசனத்தைக்கொண்டு பார்க்கும்போது, அந்த: *ஶாக்தம் பஹி: சைவம் பூஜாயாம் வைஷ்ணவம் ஸ்ம்ருதம்* (மனத்திற்குள் சக்தி உபாஸகனாகவும், வெளிவேஷத்தில் சைவனாகவும், பூஜையில் வைஷ்ணவனாகவும் இருக்கவேண்டும்.) என்று கூறுவது துராத் மாக்களால் ஏற்கத் தக்கதே ஒழிய மஹாத்மாக்களால் ஏற்கத் தக்கதல்ல.

*சுந்தரராஜாசாரி* B.A, *செர்லோபல்லி, கடப்பை ஜில்லா.*

**31. 74 ஸிம்ஹாஸநாதிபதிகள் யாவர்? இப்போது எங்கு உள்ளனர்?**

நாம் வெளியிட்ட ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் (முதற்பதிப்பு பக்கம் 251, 252) இரண்டாம் பதிப்பு பக்கம் (270,271) 74 ஸிம்ஹாஸநாதிபதிகளின் பட்டியல் கொடுக்கப்பட்டுள்ளது. இப்போது ஆங்காங்கு பல திவ்ய தேசங்களிலும் நகரங்களிலும் ஒவ்வொரு பரம்பரையைச் சேர்ந்தவர்கள் உள்ளனர். விசாரித்துத் தெரிந்துகொள்ளவேண்டும்.

*ஸ்ரீ* K.M. *ராமாநுஜ அய்யங்கார், சென்னை—5.*

**32.** K.S. **மணவாளய்யங்கார் என்னும் ஓய்வுபெற்ற தலைமை ஆசிரியர் "*திருமாலடியார்கள்*" என்னும் புஸ்தகம் வெளியிட்டு ஆழ்வார்களை சிவ, விஷ்ணு சமரசவாதிகளாகச் சித்தரித்திருக்கிறார். என்ன செய்வதென்று தெரியவில்லையே!**

இந்நூலை இம்மாத ஸ்ரீராமாநுஜனில் ஸ்ரீகாஞ்சீ மஹா வித்வான் ஸ்வாமி மிக விரிவாகக் கண்டித்திருக்கிறார். தேசிய விடுதலைப் போராட்டத்தின்போது மக்களை ஒற்றுமைப்படுத்து வதற்காகப் பல அரசியல்வாதிகள் இந்த சிவ விஷ்ணு சமரச வாதத்தைக் கிளப்பினார்கள். ராஜாஜி போன்ற உலகறிந்த

பிரமுகர்களும் பொய்யின் அடிப்படையில் அமைந்த இவ்வாதத்தைப் பிரசாரம் செய்தனர்.

இதன் பொய்ம்மையை நாம் எடுத்துக்காட்டிய பின்பு, ராஜாஜி நேர்மையுடையவராகையாலே, தனக்கு மதவிஷயங்கள் அவ்வளவாகத் தெரியாது என்று ஒப்புக்கொண்டார். நமது ஸுதர்சனத்திலும் ராஜாஜியின் இக்கடிதம் பிரசுரிக்கப்பட்டுள்ளது. காலஞ்சென்ற பேராசிரியர் அ.சீனிவாசராகவன், A.V. சுப்பிரமணிய அய்யர் ஆகியவர்கள் இவ்வாதத்தின் பொய்ம்மையை நாம் எடுத்துக்காட்டிய பின்பும் பதிலுரைக்க வழியில்லாமல் பிடித்த பிடி விடாமலிருந்தனர்.

திருமாலடியார்கள் என்னும் நூலை எழுதியவர், ராஜாஜி போன்றவர்களின் எழுத்துக்களால் மூளைச்சலவை செய்யப் பட்டவர் என்பது அவரது நூலைப்பார்த்தால் விளங்குகிறது. ஸ்ரீகாஞ்சி ஸ்வாமி இந்நூலிலுள்ள பல முரண்பாடுகளையும் அபத் தங்களையும் விரிவாகக் காட்டியுள்ளார். நூலாசிரியரின் கருத்தைத் திருத்த இதுவே போதுமானது என்று எண்ணுகிறேன். இத்தகைய வாதங்களைக் கூறுகிறவர்களிடம் ஸ்ரீராமாநுஜனிலும், ஸுதர் சனத்திலும் வெளிவரும் பல கட்டுரைகளை எடுத்துக்காட்டி, அவர்களைத் திருத்த வேண்டியது வைணவர்களின் தலையாய கடமையாகும்.

S.G. *சாரி, சென்னை–61.*

**33. அப்பயதீக்ஷிதர் ஸ்ரீகண்டபாஷ்யத்திற்கு வியாக்கியானம் செய்வதாக [கேள்வி–7] எழுதியுள்ளீர்கள். ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ரியாவில் ஸ்ரீதேசிகனது யாதவாப்யுதயம் என்ற மகா காவியத்திற்கும் அவர் வியாக்கியானம் செய்துள்ளதாக உள்ளது. முரண்பட்ட இரு நூல்களுக்குமே அவர் உரையிட்டது எப்படி?**

சைவாத்வைதத்தில் மிகுந்த பற்றுள்ளவரானாலும், அப்பய தீக்ஷிதர் இக்கால சமரசவாதிகளைப்போலவே, ஒரு உறுதியான கொள்கையில்லாதவர், தமது சாஸ்திரப் புலமையைக்

காட்டுவதற்காக அவர் விசிஷ்டாத்வைதத்தைத் தழுவி யாதவாப்யுதய வ்யாக்யானமும், நயமயூகமாலிகையும், த்வைத மதத்தைத் தழுவிய நூல் ஒன்றும் எழுதியுள்ளார். விஷ்ணு த்வேஷிகளில் தலைவரான அவரை, விஷ்ணுபரத்வத்தை உணர்ந்திருந்த அவரது தாயார் திருத்தினாள் என்றும், அதன்பின் அவர் வரதராஜஸ்தவம் போன்ற சில விஷ்ணு ஸ்தோத்ரங்களை இயற்றினார் என்றும் கூறுவதுண்டு.

K. *ஶ்ரீநிவாஸன், திருச்சி–17.*

**34. உண்மையான ஶ்ரீவைஷ்ணவனின் லக்ஷணங்கள் என்ன? அவன் கொள்ளத்தக்கவையும், தள்ளத்தக்கவையும் என்னென்ன?**

நற்குணங்கள் என்று சாஸ்திரங்களில் புகழப்படும் குணங்கள் அனைத்திற்கும் கொள்கலமாயிருப்பவனே உண்மை யான ஶ்ரீவைஷ்ணவனாவான். அக்குணங்களில் மிக முக்கிய மானது மறந்தும் புறந்தொழாமை எனப்படுவது. விஷ்ணுவைத் தப்பித் தவறி மறந்தாலும், வேறொரு தெய்வத்தைத் தொழாம லிருக்கும் பெருங்குணமே இது. கற்புடைய பெண்ணிற்கு மற்ற குணங்களில் ஏற்றத்தாழ்வு இருந்தாலும் தன் நாயகனைத் தவிர வேறு எவனையும் மனத்தாலும் விரும்பாமலிருப்பது எப்படி அவ*ஶ்*யமோ, அப்படியே வைஷ்ணவனுக்கும் இது மிக அவ*ஶ்*யம்.

சாஸ்திரங்களில் நல்லது என்று சொல்லப்படுவதெல்லாம் அவன் கொள்ளத்தக்கது: தீயது என்று சொல்லப்படுவதெல்லாம் அவன் தள்ளத்தக்கது. மறந்தும் புறந்தொழாத மஹான்களோடு ஸஹவாஸம் அவன் கொள்ளத்தக்கவைகளில் சிறந்தது; மற்ற தெய்வங்களைத் தொழுபவர்களோடு நெருங்கிய நட்புகொள்வது அவன் தள்ளத் தக்கவைகளுள் தலையானது மற்றும் அவன் கொள்ளத்தக்க ஸாத்விகாஹாரம் முதலானவற்றையும் தள்ளத் தக்க ராஜஸதாமஸாஹாரம் முதலானவற்றையும் சாஸ்திரமறிந்த பெரியோர்களிடம் கேட்டு உணரவேணும்.

R. தேவராஜன், பம்பாய்–37.

**35. கேநோபனிஷத்தில் யக்ஷஸ்வரூபமாய் வருவது சக்தியா? லக்ஷ்மியா? சாக்தர்கள் கேநோபனிஷத்தைக்காட்டி சக்தி பரத்வம் சாதிக்கிறார்களே; அது பொருந்துமா?**

கேநோபனிஷத்தின் மூன்றாவது கண்டத்தில் பின்வரும் செய்தி உள்ளது. அஸுரர்களைப் பரமாத்மாவே ஜயித்தான் என்பதை மறந்து தாங்களே ஜயித்ததாக மயங்கிய தேவர்களைத் தெளிவுபடுத்துவதற்காகப் பரமாத்மா ஓர் யக்ஷரூபத்தை எடுத்து வந்தான். அந்த ப்ரஹ்மம் இட்ட ஒரு புல்லைக் கூட அக்னி தேவனால் தஹிக்க முடியவில்லை; வாயு தேவனால் அசைக்க முடியவில்லை. இப்படி இரண்டு தேவர்களை அவமானப்படுத்திய ப்ரஹ்மம் இந்திரன் மேலே பரிவாலே அவனைமட்டும் அவமானப் படுத்தாமல் மறைந்தது. அப்போது அங்கு ஒருத்தி தோன்றினாள். அவளை தேவர்கள் இந்த யக்ஷன் யார்? என்று கேட்டார்கள். அவள் "அது ப்ரஹ்மமே; ஜயம் அந்த ப்ரஹ்மத்துடையதே; உங்களுடைய தல்ல" என்று கூறினாள் என்பது அச்செய்தி. இப்படி ப்ரஹ்மத்தைப் பற்றிய உண்மையை உணர்த்தியவள் யாரெனில், *உமா ஹைமவதீ* என்கிறது கேநோபநிஷத் ஹிமவானின் புத்திரியான உமை என்னும் பொருள் வெளிப்படையாகவே தெரிகிறது. உ என்பதை ஏவகாரார்த்தமாகக் கொண்டு, ஹேம (ஸ்வர்ண) வர்ணையாய், ஹேமாபரணங்களை அணிந்திருக்கும் *மா* எனப்படும் லக்ஷ்மி என்றும் சிலர் பொருள் கொண்டனர். அவள் பார்வதியாயிருந் தாலும், லக்ஷ்மியாயிருந்தாலும் அவள் ப்ரஹ்மமல்ல என்பது அவள் வாக்யத்திலிருந்தே கல்வெட்டாக விளங்குகிறது. தன் னையே ப்ரஹ்மமாகக் கருதியிருந்தால், இந்த யக்ஷன் யார் என்று கேட்டதற்கு ப்ரஹ்மமாகிற நானே அது என்றல்லவோ அவள் பதில் கூறியிருக்க வேண்டும். அவளோ இந்த யக்ஷன் ப்ரஹ்மமே, ப்ரஹ்மத்தினுடையதே வெற்றி என்று தன்னைக் காட்டிலும் வேறுபடுத்தியே ப்ரஹ்மத்தைப் பேசியிருக்கிறாள். ஆகையால், கேநோபநிஷத் சாக்த மதத்திற்கு மரணஅடி கொடுக்கும் உப

வாக்யங்களைப் பார்க்கும்போது இந்த ப்ரஹ்மம் நாராயணனே என்பது அசைக்கமுடியாதபடி தேறி நிற்கிறது. இதன் விரிவு ஸுதர்சனர் வெளியீடான விஷ்ணு சித்த விஜயத்தில் காணலாம்.

**36. ஆழ்வார்கள் பரமபாகவதரான சிவனைப் பல விடங்களில் தாழ்த்திப்பேசி நிந்தித்திருக்கிறார்களே; இது பாகவதாபசாரமாகாதா?**

உண்மைப் பரம்பொருளான நாராயணனுக்கு எதிர்த் தட்டாக ஜீவனான சிவனைப் பலர் பரம்பொருளாகப் பேசிய தாலேயே, ஆழ்வார்கள் சிவனுக்கு உள்ள தாழ்வை எடுத்துக் காட்டி, அவன் பரம்பொருளல்லன் என நிரூபித்தனர். இதைப் பல பரமரிஷிகளும் செய்துள்ளனர். இது நிந்தையாகாது. ஒரு ஆழ்வாரைச் சிலர் பரம்பொருளாகச் சொல்லியிருந்தாலும் அவ்வாழ்வாரும், மற்ற ஆழ்வார்களும் ஜீவனான அவ்வாழ்வாருக்கு உள்ள தாழ்வுகளை எடுத்துச்சொல்லி, அவர் பரம்பொருளல்லர் என்றே நிரூபித்திருப்பார்கள். (இதற்கு ப்ரஸக்தி ஏற்படவில்லை) ஆகையால், உண் மையை உயிர்களுக்கு உணர்த்துவதற்காக, உள்ள தாழ்வுகளை எடுத்துக்கூறுவது பாகவதாபசாரமாகாது. சிவனே இதை உகந் திருந்தார் என்பது திருமழிசையாழ்வாருக்கு பக்தி ஸாரர் என்று பட்டமளித்துச் சென்ற செய்தியிலிருந்து விளங்கும்.

'*அதிவாதீபவ*' என்றும் "*யஸ் ஸத்யேநாதி வததி ஸ ஏவாதி வததி*" என்றும் உபநிஷத்துக்களும் மற்ற தத்துவங்களைக் காட்டிலும் ப்ரஹ்மம் சிறந்தது என்று அதி வாதம் (பரதத்வ நிர்ணயம்) செய்யும்படி விதித்தன. "*யஸ் த்வைவம் ப்ராஹ்மணோ வித்யாத் தஸ்ய தேவா அஸந்வஶே*" என்று புருஷ ஸூக்தமும் பரமபுருஷனைப் பரம்பொருள் என்று அறிந்தவனுக்கு எல்லா தேவர்களும் வசப்பட்டிருந்தார்கள் என்று ஓதிற்று.

V. *ஸ்ரீநிவாஸன், திருச்சி–17.*

**37. மஹாபாகவதர்** என்று புராணங்களில் புகழப்படும்

**சிவனை, ஆழ்வார்களைப் போலே பாகவதர் என்னும் முறையில் கோயில்களில் ப்ரதிஷ்டை செய்து வைஷ்ணவர் ஏன் வணங்குவதில்லை?**

சிவன் மஹாபாகவதரானாலும், சில ஸமயங்களில் தமோகுணமிகுதியாலே எம்பெருமானோடு எதிரம்பு கோப்பவராகையால், மஹாபாகவதரானாலும் எம்பெருமானோடு எதிரம்பு கோத்த பீஷ்மர் முதலானாரைப்போலே சிவன் முதலான தேவதைகளையும் கோயில்களில் ப்ரதிஷ்டை செய்து வைஷ்ணவர்கள் வணங்குவதில்லை.

**38. ருத்ரம் நமகம் முதலானவற்றில் சிவன் முதலான தேவதைகளைப் பற்றிய வணக்கத்தைத் தெரிவிக்கும் வேத வாக்யங்களை ஓதுவதும், *ஶ்ராத்தம்* முதலானவற்றைச் செய்வதும், விஷ்ணு கோயில்களில் பரிவாரதேவதையாயிருக்கும் அவர்களையும் சேர்த்து ப்ரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்வதும் வைஷ்ணவர்களுடைய கற்புக்கு ஊறு விளைவிக்காதா?**

இவ்விடங்களிலெல்லாம், சிவன் முதலானார்க்கும் அந்தர்யாமியாயிருக்கும் நாராயணனுக்கே தங்களுடைய ப்ரதக்ஷிண நமஸ்காரங்கள் சேருகின்றன என்னும் அறிவுடனேயே வைஷ்ணவர்கள் இவற்றைச் செய்கிறார்களாகையாலே, அவர்கள் கற்புக்கு இவை ஊறு விளைவிக்காது. சைவாகமப்படி கட்டப்பட்டு, அதன்படி ஆராதனம் செய்யப்பட்டுவரும் சிவன் கோயில்களில் சிவனுக்கே ப்ராதாந்யமாகையால், அங்குள்ள சிவனையும், பரிவார தேவதையாயிருக்கும் விஷ்ணு விக்ரஹத்தையுங்கூட வைஷ்ணவர்கள் வணங்குவதில்லை.

**39. '*ஆகாஶாத் பதிதம் தோயம்*' என்று தொடங்கும் ப்ரமாணவாக்யம், எல்லா நதிகளும் கடலை அடைவது போல் எந்த தெய்வத்தை வணங்கினாலும், அது கேசவனை அடைகிறது என்று கூறுகையால், எல்லா தெய்வங்களையும் வணங்கலாம் என்று சிலர் கூறுகிறார்களே இது பொருந்துமா?**

மழைநீர் முழுவதும் பல சிறு சிறு நதிகள் மூலமாக அளவற்ற பெரிய கடலை அடைவதுபோல், மற்ற எல்லா சிறு தெய்வங்களுக்கும் அந்தந்த பக்தர்களால் செய்யப்படும் வணக்கங்கள், அந்தந்த தெய்வங்களுக்கு அந்தர்யாமியாய், அவர்களுக்கும் சேருமிடமாய் (ப்ராப்யமாய்) இருக்கும் பரமாத்மா வாயிருக்கும் தன்னை அறியாமல், தனக்குச் சரீரமான அந்தந்த தெய்வங்களை மாத்திரம் வணங்குகிறவர்களுக்குத் தாழ்ந்த பலன்களே கிடைக்கும், தன்னை அந்தர்யாமியாய் அறிந்து வணங்குகிறவர்களுக்கே உயர்ந்த பலமான மோக்ஷம் கிடைக்கும் என்று தெளிவாகக் கூறுகிறான். இதனாலேயே, "*நித்யநைமித்திக கர்மங்களில் மற்ற தெய்வங்களுக்குச் செய்யப்படும் நமஸ்காரம் கேசவனையே அடையும்*" என்னும் என்னத்துடன் நாம் அவற்றை அநுஷ்டிக்கிறோம். தாமஸமான சைவாகமங்களின்படி ஸாத்விக ஶாஸ்த்ரங்களுக்கு முரணாக சிவன் முதலானோர்க்கு ப்ராதான்யமளித்துக் கட்டப்பட்ட கோயில்களில் உள்ள விக்ரஹங் களை நாம் வணங்குவதில்லை.

*பெயர் வெளியிட விரும்பாத அன்பர் ஒருவர்*

**40. மதத்துறையில் உண்மையான சமரசம் எது? காமகோடி சிஷ்யர்களுக்கு அது புரியுமா?**

ஒவ்வொருவனும், பிறமதம் அல்லது சம்பிரதாயத்தைச் சேர்ந்தவனிடம் சகிப்புத்தன்மையோடு , அவனையும் படிப்படியாக முன்னேற்றுவதற்காகவே எம்பெருமான் அவனை அந்த மதத்தில் வைத்திருக்கிறான் என்னும் நல்லெண்ணத்துடன், அவனை வலியச்சென்று மாற்ற முயன்று புண்படுத்திக் குழப்பத்தில் ஆழ்த்தாமல் வாழும் வாழ்க்கையே உண்மையான சமரசம். Tolerance என்று ஆங்கிலத்தில் கூறப்படுவது இதுவே. "எல்லா மதமும் ஒன்று" என்று சமரசம் பேசிக்கொண்டு, நடைமுறையில் ஒரு மதத்தையும், ஒரு தெய்வத்தையும் இழிவுபடுத்திக் கொண்டு பணங்கொடுத்து அம்மதத்தவரை விலைக்கு வாங்கிக் கொண்டு வாழ்க்கை நடத்தும் காமகோடி பீடாதிபதிக்கும் அவர் சிஷ்யர்

களுக்கும், அவரை நடமாடும் தெய்வமாக்கிய கல்கி போன்ற பத்திரிகைகளுக்கும் இது என்றும் புரியாது.

**41. மூன்று மதங்களைச் சேர்த்து 'தீன் இலாஹி' என்ற பெயரில் முகம்மதிய மன்னர் அக்பர் ஆரம்பித்த மதம் என்ன ஆயிற்று? 'சாக்தம், சைவம், வைணவம்' என்கிற மூன்றையும் சேர்த்துக் கலப்படமாக்கிய நவீனகால தீன்இலாஹி மதம் என்ன ஆகும்?**

அரசராயிருக்கும் செல்வாக்கைக் கொண்டு அக்பர் ஆரம் பித்த 'தீன் இலாஹி' ஒரு மதமாகத்தானும் நிலைத்து நிற்காமல், மற்ற மதங்களையும் பலவீனப் படுத்தும்.

**42. வைதிகமதம் பலதேவதைக் கொள்கை** (Pantheism) **உடையதா? அல்லது ஒரு தேவதைக்** (Monothesim) **கொள்கை உடையதா?**

கர்மகாண்டம் எனப்படும் வேதத்தின் பூர்வபாகத்தில் நூற்றுக்கணக்கான தேவதைகள் கூறப்பட்ட போதிலும், "*அக்நிரவமோ தேவதாநாம் விஷ்ணு: பரம:*" (யஜுஸ் ஸம்ஹிதை 5-5) முதலானவிடங்களில் அக்னியே அவர்களில் மிக மிகத் தாழ்ந்தவன் என்றும், விஷ்ணுவே மிக மிக உயர்ந்தவன் என்றும் கூறப்பட்டது. ஞான காண்டம் எனப்படும் உபநிஷத் பாகத்திலும் ப்ரஹ்மா, சிவன், இந்த்ரன் முதலான பல தேவதைகள் படிக்கப் பட்டாலும், விஷ்ணு எனப்படும் நாராயணனே அவர்கள் அனை வரையும் படைத்து அளித்து அழிப்பவன் என்றும், அங்கங்களான அவர்களுக்கு ஆத்மாவாயிருக்கையாலே அனைவருமாயிருப் பவனென்றும் ஓதப்பட்டது. ஆகையால் மேலெழப் பார்க்கும் போது பல தெய்வக்கொள்கையுடையதாகத் தோன்றிய போதிலும், ஊன்றிப்பார்க்கும்போது ஒரு தெய்வக் கொள்கையை உடையதே வைதிக மதம் என விளங்கும்.

*S. ராமஸ்வாமி அய்யங்கார், ஜோஸ்யர், சிதம்பரம்.*

**43. ஐக்கிய வைஷ்ணவ ஸபை இரு ஸம்ப்ரதாயங்களையும்**

ஒன்றாக்குவதற்காக ஏற்பட்டது என்று பலர் கூறுகிறார்களே: இது உண்மையா? நடக்கக்கூடியதா?

இரு ஸம்ப்ரதாயங்களையும் ஒன்றாக்குவது எவராலும் இயலாது. அப்படி ஒன்றாக்கி ஒரு புது ஸம்ப்ரதாயத்தை உண்டாக்கினாலும் அது நீண்டநாள் வாழாது என்பதை '*தீன் இலாஹி*'யைக் கொண்டே உணரலாம். ஆகையால், அவரவர் ஸம்ப்ரதாயத்தில் உறுதியுடன், பரஸ்பர சஹிப்புத் தன்மையோடு வாழ வைஷ்ணவர்களுக்கு வழிகாட்டுவதே ஐக்கிய வைஷ்ணவ சபையின் குறிக்கோளாயிருக்க வேண்டும்.

**44. அடிமுடிதேடிய கதையில் ஏதேனும் உண்மை உண்டா?**

இக்கதை ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸங்களில் கிடையாது. இக்கதையைக் காளிதாஸன் முதலான பழைய சிவபக்த வடமொழிக் கவிகளும் எடுத்ததில்லை. ஆதி சங்கரர் முதலான மதப்ரவர்த்தகர்களும் தமது பாஷ்யங்களில் எடுத்ததில்லை. சங்க இலக்கியம் போன்ற பழந்தமிழ் நூல்களிலும் எவரும் எடுப்பதில்லை. இதிலிருந்து, நாயன்மார்கள் காலத்திற்குச் சற்றுமுன் இக்கதை புனையப்பட்டுள்ளது என்று தெரிந்துகொள்ளலாம். திருமாலைத் தாழ்த்திச் சிவனுக்குப் பெருமை சொல்லவேண்டும் என்னும் ஒரே நோக்குடன் பிற்காலத்தில் இத்தகைய கதைகள் பலவற்றைப் புனைந்து விட்டார்கள் என்பது, நடுநிலைநின்று சாஸ்திரங்களையும், இலக்கியங்களையும், ப்ராசீந க்ரந்தங்களையும் ஆராய்வாருக்கு நன்கு விளங்கும்.

*கி. அனந்த பத்மநாபன், திருவனந்தபுரம்.*

**45. ராவணனைக்கொன்ற ப்ரஹ்மஹத்தி தீருவதற்காக ராமன் சிவலிங்கத்தை ராமேச்வரத்தில் பூஜித்ததாகக் கூறுகிறார்களே; இதற்கு ஆதாரம் உண்டா?**

இதற்கு வால்மீகி ராமாயணத்திலோ, கம்பராமாயணத்

திலோ அல்லது வேறு எந்த பழைய நூல்களிலோ எந்த ஆதாரமும் கிடையாது. ராவணவதமானவுடன் பிரமன், சிவன் முதலான எல்லா தேவர்களும் வந்து, ராமனே பரமாத்மா என்று ஸ்தோத்ரம் செய்ததாக எல்லா ராமாயணங்களிலும் இருக்கும்போது, ராமனுக்கு ப்ரஹ்மஹத்தி தோஷம் ஏற்பட இடமே இல்லை. இது போலவே மற்றும் நூற்றுக்கணக்கான இடங்களில் ராமன் சிவலிங்க பிரதிஷ்டை செய்ததாக சைவர்கள் ஸ்தல புராணங்கள் எழுதிவிட்டார்கள்.

*ஸம்பத், சென்னை–17.*

**46. அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் ஆகிய மூன்று மதங்களும் முறையே அந்தந்த மதத்தை ஸ்தாபித்த ஆதிசங்கரர், ஸ்ரீராமாநுஜர், ஆனந்த தீர்த்தர் [மத்வர்] ஆகியவர்களுக்கு முன் இருந்தனவா? எது வேதத்தால் ஆதரிக்கப்பட்ட மதம்?**

மூன்று மதங்களுமே இந்த மதஸ்தாபகர்களுக்கு முன்னால் இருந்து வந்தனவானாலும், அந்தந்த மதங்களின் கொள்கைகளை விரிவாகத் தெளிவுபடுத்தி, தம் காலத்திலிருந்த பல ப்ரதிபக்ஷிகளை ஜயித்துத் தம் மதத்தை நிலைநாட்டியபடியாலேயே இவர்கள் அந்தந்த மதத்தின் ஸ்தாபகராகப் பெயர்பெற்றார்கள். ஸ்ரீராமாநுஜர் போதாயந மஹரிஷியின் ப்ரஹ்மஸூத்ர வ்ருத்தி க்ரந்தத்தையும் மற்றும் பல பூர்வாசார்யர்களின் ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தை எழுதத் தொடங்குவதாக, ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில் அருளியிருக்கிறார்.

இதிலிருந்தும், வேதவாக்யங்களுக்குப் பொருளுரைக்கும் ப்ரஹ்மஸூத்ரங்களின் அமைப்பிலிருந்தும் ஸூத்ரகாரரான வேதவ்யாஸர் விசிஷ்டாத்வைதியே என விளங்குகிறது. சங்கர பாஷ்யத்தையும், ஸ்ரீபாஷ்யத்தையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த தீபா முதலான மேல்நாட்டு ஆராய்ச்சியாளர்களும் இவ்விஷயத்தை இசைந்துள்ளனர். ப்ரஹ்மஸூத்ரகாரர், தமது ஸூத்ரமொன்றில் *ஔடுலோமி* என்பவருடைய-ஜீவன் மோக்ஷத்தில் ப்ரஹ்மமாகி விடுகிறான் என்னும் அத்வைதக் கொள்கையை

எடுத்து, அதைக் கண்டித்துக் காமக்ருத்ஸ்நரின் விஸிஷ்டாத்வைதக் கொள்கையே தமது மதம் எனக் காட்டியிருப்பதால் அத்வைதக் கொள்கை ஸூத்ரகாரர் காலத்திலேயே இருந்தது என விளங்குகிறது. இவ்வண்ணமே த்வைதக் கொள்கைகளையும் ஸூத்ரகாரர் கண்டித்திருக்கிறார். பல வேத வாக்யங்களிலும், ஸ்ம்ருதிகளிலும், இதிஹாஸங்களிலும், புராணங்களிலும் அத்வைத, த்வைதக் கொள்கைகள் கண்டிக்கப்பட்டு, விசிஷ்டாத் வைதக் கொள்கைகள் நிலை நாட்டப்பட்டுள்ளன. தமிழ் நாட்டில் மிகப் பழைய சங்க இலக்கியங்களிலும் இதைக் காணலாம். இவற்றி லிருந்து, எல்லா மதங்களுமே நீண்டகாலமாய் இருந்தபோதிலும், விசிஷ்டாத்வைத மதமே அநாதி காலமாகச் சான்றோர்களால் வைதிகமதமாகக் கொள்ளப்பட்டு வந்தது என நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

K.M.*ராமாநுஜ அய்யங்கார் ஸ்வாமி, தென்திருப்பேரை.*

**47. '*அரியல்லால் தேவியில்லை*' என்னும் தேவாரத்தைப் பற்றிய ஐதிஹ்யத்தை விளக்கி எழுதப்பிரார்த்திக்கிறேன்.**

இந்த ஐதிஹ்யம்-பெரியதிருமொழி (2-6-1) **நண்ணாத** என்று தொடங்கும் பாசுரத்தின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தில் உள்ளது. இதன் ஸாரம் பின்வருமாறு :-

நாயன்மார்களில் முக்கியமானவர்களான நால்வரில் ஒருவரான அப்பர் எனப்படும் நாவுக்கரசர் தமது தேவாரப்பாடலொன்றில் அரியல்லால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே என்று பாடியிருக்கிறார். விஷ்ணு சிவனுடைய விருப்பத்திற்கிணங்கி மோஹினியுருவை எடுத்தபோது, சிவன் அந்த மோஹினியைக் கண்டு காமுற்றுத் துரத்த, மோஹினி ஓட, சிவனுடைய வீர்யம் விழுந்து, சாஸ்தா என்றும், ஐயனார் என்றும், ஐயப்பன் என்றும் பெயர் பெற்ற தெய்வமாக அந்த வீர்யம் உருவெடுத்தது என்று புராணங்களில் ஒரு கதை உள்ளது இந்தக் கதையிலிருந்து சிவனுக்கு விஷ்ணு தேவியாவதாகக் கொண்டு, தேவியான விஷ்ணுவைக் காட்டிலும், தேவனான சிவனுக்குப் பெருமை

செல்லுவதாக எண்ணி, இப்பாடல் எழுந்துள்ளது. இப்பாடலை ஒரு பரமசைவன் நம்பிள்ளையிடம் சொல்லி, அவர் பலகால் மறுத்தும், அதற்குப் பொருள் சொல்லும்படி வற்புறுத்தினான். அதற்கு நம்பிள்ளை பின்வருமாறு அருளிச்செய்தார் : -

இந்தக் கதையிலிருந்து பெண்வேடம் பூண்ட புருஷோத்தமனைக் கண்டு துரத்திக் கொண்டு சிவன் ஓடி, நடுத்தெருவில் வீர்யம் விழுமளவுக்கு சிவன் நடந்து கொண்டான் என்றால், இது சிவனுக்குப் பெரிய அவமதிப்பையன்றோ அளிக்கும்; இப்படி ஒரு கதையைச் சொன்னவன் அறிவிலி, நம்பத்தகாதவன் என்று இருக்க வேண்டியது உனக்குத் தகுதியாயிருக்க, இதை உண்மையாகவும், சிவனுக்குப் பெருமை தருவதாகவும் நினைத்துக் கொண்டு, இப்பாடலுக்கு என்னிடம் பொருள்கேட்க என்னென்பது! என்று பொருள்பட நம்பிள்ளை அருளிச்செய்தார் என்பதே இவ்வைதிஹ்யத்தின் ஸாரம். சிவனுக்குப் பல புராணங்களில் பிரஸித்தமான இந்த அபசரித்திரத்தை சைவர்களாலேயே மறுக்க முடியாமையால், இதைப் பெருமையாகவே கொண்டு விடுகிறார்கள் என்பது இவ்வைதிஹ்யத்திலிருந்து விளங்குகிறது.

*மு. நந்தகோபால், சென்னை–38.*

**48. 1000 இடம்புரிச் சங்கிருக்கும் இடத்தில் ஒரு வலம்புரியும், 1000 வலம்புரியிருக்குமிடத்தில் ஒரு சலஞ்சலமும், 1000 சலஞ்சலம் இருக்கும் இடத்தில் ஒரு பாஞ்சஜன்யமும் இருக்கும் என்கிறார்களே – இது உண்மையா?**

மற்ற சங்குகள் விஷயம் ஒரு புறமிருக்க; சங்குகளின் சக்ரவர்த்தியான பாஞ்சஜன்யம் என்னும் சங்கம் எம்பெருமானுடைய திருக்கையிலிருக்கும் பாஞ்சஜன்யம் ஒன்றேயாகும். இரண்டாவது பாஞ்சஜன்யம் கிடையாது.

*S. வேங்கடம், சமயபுரம்.*

**49. அக்டோபர் கலைமகளில் '*மூர்த்தி பேதங்கள்*' என்னும்**

**தலைப்பில் காமகோடி பீடாதிபதி குழப்பமாக எழுதியிருப்பதை கவனித் தீர்களா?**

'*யோ யோ யாம் யாம்*' (கீதை 7-21) என்னும் கீதா ப்லோகத்தை எடுத்துக்காட்டி, பகவானை எந்த மூர்த்தி ரூபத்தில் வழிபட்டாலும் அந்த மூர்த்தி ரூபத்தில் பகவான் அநுக்ரஹம் செய்கிறார் என்று சமரசம் பேசுகிறார் பீடாதிபதி. இதையொட்டிள்ள "*அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம்*" (கீதை 7-23) என்னும் ச்லோகத்தில் மற்ற தேவதைகளை உபாஸிப்பவர்கள் அல்பமும், நிலையற்றதுமான பலனைப் பெறுகையால் புல்லறி வாளர்களே என்றும், தன் பக்தர்களே நிலையான பலனைப் பெறுகிறார்கள் என்றும் முழுங்கியிருக்கிறான் கண்ணன்.

அவ்விடத்தில், ஆதிசங்கரர் "ஆயாஸம் ஒத்திருக்கையில், என்னைப் பற்றி அநந்தபலனைப் பெறாமல், தேவர்களைப் பற்றி அற்பபலனைப் பெற்றுப் போகிறார்களே" என்று பகவான் கஷ்டப்படுவதாக பாஷ்யமிட்டிருக்கிறார். பீடாதிபதி இப்போது கொண்டிருக்கும் கொள்கைக்கு இவ்வாக்யமும், பாஷ்யமுமே மரண அடிகொடுக்கக்கூடியவை. ஆகையால், இவற்றை மறைத் துக் குழப்பமாக எழுதுவது தவிர அவருக்கு வேறு வழியில்லை.

வேதங்களிலும் உபனிஷத்துக்களிலும் தேவர்களுக்குக் கெல்லாம் மேலான தேவன் ஒருவன் இருப்பதாக முழங்கப் பட்டிருக்கிறது. இந்த தேவன் நாராயணனே என்ற கூடஸ்தரான ஆதிசங்கரரே பாஷ்யங்களில் தெளிவவாகச் சொல்லியிருக்கிறார். இப்படி யிருக்க, இதில் குழப்பத்தை விளைவிக்கும் பீடாதிபதியின் நிலை பரிதாபத்துக்குரியது. ஒரு மார்க்கத்திலே போனால் நான்கு நாளிலே போகலாம்; இன்னொரு மார்க்கத்திலே போனால் பத்து நாள்கள் ஆகலாம், ஆனால் ஆகட்டுமே, என்கிறார். இங்கு நாள்கள் என்றது உண்மையில் பல கற்ப காலங்களைக் குறிக்கும் என்பதையே மறந்துவிட்டாரந்தோ! விரைவில் மோக்ஷம் அடைய எந்த தேவதையைப் பற்றுவது நல்லது என்பதை இனியாவது சிஷ்யர்களுக்கு உணர்த்தினால் அவர்களுடைய குழப்பம் நீங்கும்.

*வித்வான் துரை திருவேங்கடம், திருநாகேச்வரம்.*

**50. தெய்வத்தின் குரல் என்ற காமகோடிப் பெரியவர் உரை நூலில் 51ஆம் பக்கத்தில் 'கண்ணன் சொன்னான் கம்பனும் சொன்னான்' என்ற தலைப்பில் என்னிடத்தில் பொருட்கள் இல்லை நானும் பொருட்களிடத்தில் இல்லை என்று கண்ணன் கூறுவதும் அலங்கலில் என்று தொடங்கும் பாடலில் கம்பன் கூறுவதும் அத்வைத பாஷை என்று கூறுவதில் உள்ள உண்மை என்ன?**

(1). என்னால் இவ்வுலகம் வியாபிக்கப்பட்டுள்ளது; (2.) என்னிடத்தில் எல்லா பூதங்களும் உள்ளன; 3. நானும் அவற்றில் இல்லை; (4) பூதங்களும் என்னிடம் இல்லை என்று தோன்றும். உலகமெல்லாம் பொய்; ஆகையால் (1),(2) வாக்யங்கள் பொய் நிலையைக் கூறுகின்றன; (3),(4) வாக்யங்கள் பொய்நிலையைக் கூறுகின்றன என்பது அத்வைதிகளின் வாதம்.

அபேத ச்ருதியைக் கொண்டு பேத ச்ருதியை தள்ளுவது போன்றது இது. இந்த நாலு வாக்யங்களில் எதையும் தள்ளாமலும், முரணில்லாமலும் எம்பெருமானார் பின்வருமாறு பொருளுரைத்திருக்கிறார் :-

அ). முதல் வாக்யம் - எம்பெருமானுடைய ஸர்வவ்யாபகத்வத்தைத் தெரிவிக்கிறது.

ஆ). இரண்டாவது வாக்யம் - எம்பெருமானுடைய ஸர்வதார கத்வ நியாமகத்வங்களைக் காட்டுகின்றது.

இ). மூன்றாவது வாக்யம்-மற்ற பொருள்கள் எம்பெருமானுக்கு தாரகமாகவும் நியாமகமாகவும் இல்லை என்று காட்டுகிறது.

ஈ). நாலாவது வாக்யம் - கடம் முதலானவை ஜலம் முதலானவற்றைச் சூழ்ந்து நின்று தரிப்பதுபோல் நான் மற்ற பொருள்களை தரிப்பதில்லை; என் ஸங்கல்பத்தாலேயே எல்லா

வற்றையும் தரிக்கிறேன் என்று காட்டுகிறது - என்பது எம்பெருமா னார் நிர்வாஹம். கீதையில் எவ்விடத்திலும் உலகம் பொய் என்று கூறாமையால், அத்வைத வாதம் கண்ணன் உகந்ததன்று என்றும், உலகம் ஶரீரமாகவும், தான் அதற்கு ஆத்மாவாகவும் இருப்பவன் என்று ஶரீராத்ம பாவத்தைப் பல இடங்களில் கண்ணன் கூறு கையால், விசிஷ்டாத்வைதமே கண்ணன் உகந்தது என்றும் நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். விரிவு நமது கீதா வியாக்யா னத்தில் கண்டுகொள்வது.

கம்பன் பரமவைஷ்ணவன் என்பதைப் பீடாதிபதி ஒப்புக் கொண்டிருக்கிறார். ஆனால் '*அலங்கலில்*' என்று தொடங்கும் சுந்தர காண்டக் கடவுள் வாழ்த்துப் பாடலைக்காட்டி, அவன் அத்வைதி என்கிறார். கம்பராமாயணத்தில் ஒரு பாடலிற் கூட '*உலகம் பொய்*' என்று கூறாத அவன் விசிஷ்டாத்வைதியேயொழிய மாயாவாதியான அத்வைதியல்லன் என்பது கம்பராமாயணம் முழுவதையும் படித்தவர்களுக்குத் தெளிவாக விளங்கும். கடவுள் வாழ்த்துக்களை மாத்திரம் கண்டாலும் இது மிகத்தெளிவாக விளங்கும். எல்லா உலகையும் படைத்து, அளித்து, அழிப்ப வனாய், ஸத்வகுணத்தை உடையவனாய், அரியென்று வேதத்தின் ஆதியந்தங்களில் ஓதப்படுபவனே பரம்பொருள் என்று பாலகாண்டக்கடவுள் வாழ்த்துகளில், தான் விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களின் கொள்கையைத் தழுவியவன் என்று காட்டினான். அயோத்யாகாண்டக் கடவுள் வாழ்த்தில்,

***'வான் நின்று இழிந்து, வரம்பு இகந்த மாபூதத்தின் வைப்பு எங்கும், ஊனும் உயிரும் உணர்வும்போல், உள்ளும் புறத்தும் உளன் என்ப— கூனும் சிறியகோத்தாயும் கொடுமை இழைப்ப, கோல்துறந்து, கானும் கடலும் கடந்து, இமையோர் இடுக்கண் காத்த கழல்வேந்தே'***

என்று ஸர்வேஶ்வரன் உலகை உள்ளும் புறம்பும் வியாபித் திருக் கிறான் என்று கூறுவதன் மூலம் தான் பரம விசிஷ்டாத் வைதியே என்று காட்டினான் கம்பன். ஆரணியகாண்டக் கடவுள் *வாழ்த்திலும்*, ***'பேதியாது நிமிர் பேதவுருவம் பிறழ் கிலா...... ஆதி தேவர்'*** (தன்னிடம் இருந்து பிரியாமலேயே (தன்னால்) ஸ்ருஷ்டிக்கப்படும் பல பேத

உருவங்களை விட்டுப் பிரியாமல் அவற்றுள் வியாபித்திருக்கும் ஆதிதேவர்) என்று உலகிற்கு ப்ரஹ்மத்தைக் காட்டிலும் பேதம், அபேதம் ஆகிய இரண்டையும் முக்கியமாக ஒப்புக்கொள்ளும் விசிஷ்டாத்வைதியேதான் எனக்காட்டினான் கம்பநாட்டாழ்வான்.

*'மூன்று உரு எனக் குணம் மும்மை ஆம் முதல்,*
*தோன்று உரு எவையும், அம்முதலைச் சொல்லுதற்கு*
*ஏன்று உரு அமைந்தவும், இடையில் நின்றவும்*
*சான்று உரு, உணர்வினுக்கு உவந்தது ஆயினான்'*

(ஞானிகளின் நல்லறிவுக்கு உவந்த பொருளாயிருக்கும் ராமபிரான்-ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களோடு சேர்ந்ததாய், - ஸ்ருஷ்டியில் முதலில் தோன்றும் மூலப்ரக்ருதியும், அதிலிருந்து தோன்றிய எல்லாத் தத்துவங்களும், அந்த மூலப்ரக்ருதியைப் பெயரும் உருவமும் கொடுத்துச் சொல்லுவதற்குத் தகுதியாக நிற்கும் தேவர் முதலான ஶரீரங்களும், தனக்கும் அந்த ஶரீரங்களுக்கும் இடையில் நிற்கும் ஜீவர்களும் ஆகிய அனைத்தையும் தனக்குச் சிறந்த சரீரமாகக் கொண்ட பரம்பொருளாம்) என்று விசிஷ்டாத்வைதக் கொள்கையை கிஷ்கிந்தா காண்டக் கடவுள் வாழ்த்தில் வடித்துக் கொடுக்கிறான் கம்பநாடுடைய வள்ளல். இத்தகையவன்,

*'அலங்கலில் தோன்றும் பொய்மை அரவு என, பூதம் ஐந்தும்*
*விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடு உற்ற வீக்கம்,*
*கலங்குவது எவரைக் கண்டால், அவர் என்பர் – கை வில்ஏந்தி*
*இலங்கையில் பொருதார் அன்றே, மறைகளுக்கு இறுதி ஆவார்'*

[மாலையிலே (மயக்கத்தால்) தோன்றுகிற பொய்ப்பாம்பு (உண்மையறிவு ஏற்பட்டவுடன், விரட்டவேண்டிய அவஶ்யம் இல்லாமல் ஓடுவது] போல், ஐந்து பூதங்களும் தம் நிலை பெயர்ந்து விகாரமடைந்து ஒன்று சேர்ந்து தேவர் முதலான வேறுபாடுகளை உற்றுப் பெருத்து நிற்கும் சரீரங்கள், எந்தப் பெருமானைக் கண்டவுடன் (நாம் விரட்டவேண்டிய அவச்யம் இல்லாமல்) கலங்கி ஓடிப்போமோ, அவரே வேதங்களின் முடிந்த

பொருள் என்றும், அவரே கையில் வில் ஏந்தி இலங்கையில் போர் புரிந்தவர் என்றும் ஞானிகள் கூறுவர்] என்னும் ஸுந்தரகாண்டக் கடவுள் வாழ்த்தில் அத்வைதக் கொள்கையை எப்படிக் கூறியிருக்க முடியும்? பரமாத்மாவான விஷ்ணுவின் ஞானம் ஏற்பட்டவுடன், சரீரங்கள் விட்டோடுவதற்கு உண்மையறிவு ஏற்பட்டவுடன் மாலையில் பாம்பு எனும் மயக்கம் விட்டு ஓடுவதை திருஷ்டாந்த மாகக் காட்டிய இது, அத்வைதத்திற்கு எப்படி ஸாதகமாகும்? அத்வைதத்தைக் கம்பன் ஆதரிப்பானானால் மாலையில் பாம்பு போலே இவ்வுலகம் பொய் என்றல்லவோ, கூறியிருக்க வேண்டும். அப்படி எங்குமே கூறவில்லையே! கலங்குவது என்பது கலங்கி ஓடிப்போகும் என்ற பொருள்படுமேயொழிய, பீடாதிபதி கூறுவது போல் விலகிப்போகும் என்ற பொருள்படாது என்பதையும் சிறிது தமிழறிவு உள்ளவரும் உணர்வர். இதன் விரிவை, நமது கம்பனின் சமயத்தில் காணலாம்.

R. *ஸம்பத், சென்னை–17.*

**51. ஸந்நிதிகளில் மூலமூர்த்தி, பக்தர்கள் அணிவது போன்ற திருமண்காப்பை அணிவதன் கருத்து என்ன?**

பக்தர்கள் அணியும் ஊர்த்வபுண்ட்ரம் அவர்களை உயர் கதிக்கு இட்டுச் செல்கின்றது; ஆகையால் இதுவே நம்மாலும் தரிக்கத்தக்கது என்னும் அபிமானத்தாலே பெருமாள் ஊர்த்வ புண்ட்ரத்தை நெற்றியில் தரிப்பதாக வரதராஜஸ்தவத்தில் கூரத்தாழ்வான் உத்ப்ரேக்ஷிக்கிறார். இதுவே இக்கேள்விக்கு பதிலாகத்தக்கது.

C. *முரளி, சென்னை–2.*

**52. வாமனாவதாரத்தில் பகவான் சிறிய அடியைக்கொண்டு மூன்றடி யாசித்து, பெரிய அடியைக் கொண்டு அளந்து கொண்டது வஞ்சனையல்லவா? இது பகவானின் குணத்திற்குப் பொருந்துமா?**

பகவான் இந்திரனுக்கு அளித்திருந்த மூவுலகையும் மஹா

பலி பறித்துக்கொண்டு, அவற்றைத் தன்னுடையவையாக அபிமானித்தான். மூவுலகையும் உடையவனான பகவான் மஹாபலியை அழித்து, மூவுலகையும் கொண்டிருந்தாலும் அது நியாயமே. மஹாபலியிடம் வண்மை முதலான சில குணங்கள் இருந்ததால், அவனை அழிக்காமல், தன்னை யாசகனாகத் தாழ்த்திக்கொண்டு, சிறிய வடிவைக் காட்டி யாசித்து, பெரிய வடிவாலே அளந்து கொண்டு, மஹாபலிக்கும் பாதாளத்தில் சிறந்த போகத்தைக் கொடுத்து அவனுக்கு ரக்ஷகனாகவும் எம்பெருமான் இருப்பது அவனுடைய மஹாகுணத்தைக் காட்டுமேயொழிய குற்றத்தின் பாற்படாது.

ஒரு *உபயவேதாந்தரஸிகர்*, *பெங்களூர்*.

**53. புரட்டாசி '*ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா*' வில் '*காணவந்த சோழர்*' என்னும் தலைப்பில் வெளிவந்துள்ள கட்டு ரையில் தேவரீருடைய தனி ச்லோக விவரணத்தில் ஒரு விஷயத்திற்குக் கருத்து வேறுபாடு தெரிவித்திருப்பது பற்றி விளக்க வேண்டுகிறேன்.**

'***அஸ்மிந் மயாஸார்த்தம்***' (ரா.ஆ.63-12) என்னும் ஸ்ரீராமா யண ச்லோகத்தை விவரிக்கும் பெரியவாச்சான்பிள்ளை *மயா ஸார்த்தம்* என்ற இடத்தில், '*ஸஹயுக்தேSப்ரதாநே*' என்னும் வ்யாகரண ஸூத்ரப்படி பெருமாள் தமக்குப் பிராட்டியைக் காட்டிலும் ப்ரணயதாரையில் (காதல் பரிமாற்றத்தில்) அப்ராதான் யத்தைத் தெரிவித்திருப்பதை "நாமுங்கூடக் காணவந்த சோழரோபாதி யாகக் கடக்க நிற்கும்படி, அவளுடைய அளவுடைமையும், விதக்த மாகப் பரிமாறின படியுங்காண்" என்று பெருமாள் வாக்யமாகவே விவரித்துள்ளார். "ப்ரணயதாரையில் (பெருமாள்) தம்மைத்தாம் சால மதித்திறேயிருப்பது" என்பது இதற்கு முன் உள்ள வாக்யம். இந்த ச்லோகம் பெரியதிருமொழி (2-7-7) 'களங்கனிமுறுவல்' என்னு மிடத்தில் எடுக்கப்பெற்று, பெரியவாச்சான்பிள்ளையால் வியாக்கியானம் செய்யப்பெற்றுள்ளது.

'***காணவந்த சோழர்***' என்றதுக்கு அவ்விடத்தில் அரும் பதவுரைகாரர் '*மல்ல யுத்தம் பார்க்க வந்த சோழராஜாக்கள்*' என்று

விவரணம் எழுதியுள்ளார். முன் வாக்யம் ப்ரணயதாரையைப் பற்றியதாகையாலே, மல்லயுத்தத்தைச் சொல்லுவதைக் காட்டிலும், 'நாடகத்தில் காதல் விளையாட்டுக்களைக் காணவந்த சோழன் அரசன்' என்று கூறுவது ஸ்வரஸம் என்று எண்ணி, நாம் தனிச்லோக தர்ப்பணத்தில் அப்படி விவரித்தோம். நமது நண்பரும், வேதாந்தவாவதூக பிருதாலங்க்ருததருமான வில்லிவலம் நாராயணாசார்ய ஸ்வாமி, 'அரசுரிமை காரணமாகத் த(ா?)ம் நாட்டில் எங்காவது நடக்கும் வைஷ்ணவர்களின் வழிபாட்டுக் கோஷ்டியைக் காண அக்காலத்திய சோழ அரசர் வருவர்; அப்போது அந்த அரசரை அளவுக்கு மீறி வைஷ்ணவக்கோட்டியில் எவருமே வரவேற்பதில்லை. அதனால், அரசர்களும் கொஞ்சம் மன வருத்தம் தோற்றும்படி தூரத்தில் நின்றே தமது கடமையைச் செய்து விட்டுத் திரும்பும் அக்காலத்திய நிகழ்ச்சியைக் கூறுவதாக ப்ரியாவில் விவரித்துள்ளார்.

நாம் விவரித்திருப்பது ப்ரணயதாரையில் என்னும் முன் வாக்கியத்திற்குப் பொருந்தியது. "ப்ரணயதாரையில் பிராட்டியோடு ஸமப்ரதானமாகவும், ஒருபடி கூடவுமே கலந்துகொள்ள உரிமையுள்ள நானும், ஒரு நாடகத்தில் ப்ரணயதாரையை ரஸிக்குமளவோடு நிற்கும் சோழவரசனைப் போலே அப்ரதானனாக ஆகிவிட்டேன்" என்று இரண்டாவது வாக்கியத்திற்குப் பொருளுரைத்தால், ப்ரகரணத்திற்கு மிகப்பொருந்தியிருக்கிறது. வில்லிவலம் ஸ்வாமியின் நிர்வாஹத்தில் இந்த ஸ்வாரஸ்யம் உள்ளதா என்பதை நடுநிலையாளர்கள் ஆராயவேணும். அவர் காட்டும் நிர்வாஹத்தில் காணவந்த சோழருக்கு வைஷ்ணவகோஷ்டியில் அப்ரதானமான அந்வயமும் இல்லை என்பது குறிக்கொள்ளத் தக்கது.

V. *கிருஷ்ணஸ்வாமி, திருச்சி.*

**54. பதினெட்டு புராணங்களை வியாஸர் இயற்றியதாகக் கூறுவது சரியா?**

ஒன்றுக்கொன்று மிகவும் முரண்பட்ட பல புராணங்களை

ஒருவரே இயற்றுவது இயலாது என்பது சிறிது அறிவுள்ளவர் களுக்குக் கூட விளங்கும். ஆனால், "*அஷ்டா தசபுராணாநாம் கர்த்தா ஸத்யவதீ ஸுத:*" என்னும் புராணவசனத்தைக் காட்டி, பதினெட்டு புராணங்களையும் வியாஸர் இயற்றியதாகக் கூறு கிறார்கள். வியாஸருடைய தகப்பனார் பராசரமஹர்ஷி இயற்றிய தாக ஸுப்ரஸித்தமான ஸ்ரீவிஷ்ணுபுராணத்தை வியாஸர் இயற்றிய தாகக் கூறுவது எவ்வகையிலும் பொருந்தாதாகையால், இவ் வசனத்திற்கு வேறுபொருள் கூறியே தீரவேண்டும். தம் காலத்தில் பிறர் இயற்றியவையும், தாம் இயற்றியவையுமாயிருந்த புராணங் களையும், ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என மூன்று வகை யாகப்பிரித்து, அந்தந்த குணம் மிக்கவர்களிடம் அந்தந்தப் புராணத்தைப் பிரசாரம் செய்யும் பொறுப்பை ஒப்படைத்தவர் வியாஸரேயாகையால், அவரை அஷ்டாதசபுராணகர்த்தா என்று புராணவசனம் கூறுகிறது என்று கொள்வதே நல்வழியாகும்.

*அண்ணாசுந்தரராஜன், திருவல்லிக்கேணி.*

**55.சென்னைப் பல்கலைக்கழகத்தின் B.L.it. என்னும் பட்டப் படிப்புக்குப் பாடநூலாயிருப்பது இலக்கிய வரலாறு என்னும் தமிழ் உரை நூல். புலவர் ஆ.வைத்திலிங்கம் M.A., புலவர் P.O. நாசுஉர்மீரான் ஆகிய இருவரும் உரை எழுதியவர்கள். ராஜம்& Co., No.4., சிவராமன் தெரு, மந்தைவெளி, சென்னை - 28. விலாசமுள்ள பதிப்பகத்தாரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதில், நாதமுனிகள் தொண்டை நாடு சென்று முதல் நான்கு ஆழ்வார்கள் இயற்றிய பிரபந்தங்களையும், பிறகு சேர ,சோழ,பாண்டிய நாடுகளுக்குச் சென்று மற்ற ஆழ்வார்களின் பிரபந்தங்களையும் சேகரித்தார் என்றும், திருக்குருகூரில் பராங்குசதாசரின் நட்பைப் பெற்று, திருவாய்மொழிச் சுவடியைப் பெற்றார் என்றும் எழுதியுள்ளது. வைஷ்ணவ மாணவர்களும் இதைப் படித்து, இதன்படியே பரிக்ஷையில் விடையும் எழுத வேண்டியுள்ளதே! இதற்கு என் செய்வது?**

வைஷ்ணவ மரபு தெரியாதவர்களும், வைஷ்ணவத்தில் விரோதங்கொண்டவர்களும் எழுதும் பல பாடப்புத்தகங்களில்

இப்படிப் பல அபத்தங்கள் உள்ளன. அம்பிகாபதி, அமராவதி பற்றி ஏற்கெனவே நாம் எடுத்துக்காட்டியிருக்கிறோம். உண்மைக் குப் புறம்பான பொய்களை மனம் போனபடி எழுதியிருக்கும் இந்நூல் பற்றி சர்வகலாசாலை அதிகாரிகளுக்கும் அரசாங்க அதிகாரிகளுக் கும் எடுத்துக்காட்டி, இனியாவது இத்தகைய நூல்களைப் பாடப் புத்தகமாக வைக்காமலிருக்கும்படி வேண்டிக்கொள்வது தவிர நமக்கு வேறு வழியில்லை. நாம் எடுத்துக்காட்டினாலும் அதிகாரி கள் செவியேற்பதில்லை என்னும் இழிநிலையுள்ள இந்நாட்டில், இதற்கு விமோசனமேயில்லை என்றே தோன்றுகிறது.

*வித்வான் துரை திருவேங்கடம், திருநாகேச்வரம்.*

**56. தங்கள் 53ஆவது பதிலுக்கு மறுப்பாக *ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ரியா* கார்த்திகை இதழில் வில்லிவலம் ஸ்வாமி காணவந்த சோழர் பற்றிக் கருத்து விளக்கம் செய்திருக்கிறார். இது பற்றிய உண்மையை விரிவுக்கு அஞ்சாமல் தெளிவாக விளக்க வேண்டுகிறேன்.**

காணவந்த சோழர் என்பது, பெரியவாச்சான் பிள்ளை முதலான வ்யாக்யாத்ரு ஸார்வபௌமர்கள் தமது வ்யாக்யானங் களில் பலவிடங்களில் எடுக்கும் பிரதேச வழக்குத் தொடர். சோழ வளநாடு சோறுடைத்து என்னும் முதுமொழியின்படி காவிரியி னாலே வளம் பெருகிநிற்பது சோழநாடு. எந்நாளிலும் சோற்றுக் கவலை இல்லாமையாலே, பல ரஸங்களும் நிறைந்த கலைக ளெல்லாம் இந்நாட்டில் பல்கிப்பெருகின. சோழ அரசர்கள் இக் கலைகளுக்குக் காவலர்களாகவும், போஷகர்களாகவும் இருந்து வந்தனர். மல்லயுத்தம், ஏறுதழுவுதல், சிலம்பம் முதலான வீர விளையாட்டுக்களும், நவரஸங்களையும் சித்தரிக்கும் நாடகங் களும், நாட்டியங்களும் அவ்வரசர்களால் விசேஷமாக ஆதரிக்கப் பட்டன. இவற்றுக்கு உதவியளிப்பதோடு நில்லாமல், அவ்வரசர்கள் தாமே நேரில்வந்து இக்கேளிக்கைகளைக் கண்டு களிப்பவர்களா கவுமிருந்தனர். ஒவ்வொரு வகைக் கேளிக்கையும் ஒவ்வொரு ரஸத்தைப்ரதானமாகக் கொண்டதாயிருக்கும். காதல், வீரம் முதலான சுவைகளில் ஒவ்வொன்று அவற்றில் களிநடம்புரியும்.

இச்சுவைகள் அனைத்திலுமே வல்ல ப்ரதானராயினும் சோழ அரசர்கள் பரம ரஸிர்களுமாகையாலே, தமது ப்ராதான்யத்தைக் கைவிட்டு, நாடகத்தில் அல்லது வீரவிளையாட்டுகளில் பங்கு கொள்ளும் நடிகர்களுக்கு அல்லது வீரர்களுக்கே ப்ராதான்யத்தை அளித்து, அவர்களைப் பாராட்டுவர். அக்கேளிக்கைகளை ரஸிக்கும் அப்ரதான ஸ்தானத்திலேயே தம்மை அமைத்துக் கொள்வர்.

இத்தகைய பண்பினாலேயே, ப்ரதானனாயிருக்க உரிமை பெற்றவன் தன்னை அப்ரதானனாக்கிக்கொள்ளும்போது, காணவந்த சோழர் போல ஆனான் என்னும் வழக்குத்தொடர் நமது பூர்வாசார்யர்கள் காலத்திலே சோழநாட்டில் ஏற்பட்டிருந்தது. இவ்வழக்கைப் பயன்படுத்திக் கொண்டு *அஸ்மிந் மயா ஸார்த்தம்* (ரா-ஆ, 63-12) என்னும் பரம *ஶ*்ருங்காரமாயிருக்கும் ச்லோகத்தை விவரிக்கும்போது. ப்ரணயதாரையிலே (காதல் பரிமாற்றத்திலே) ப்ரதானராகத் தம்மை மதித்திருக்கும் பெருமாள், நானுங்கூடக் காணவந்த சோழரைப்போலே அப்ரதானனாய்க் கடக்க நிற்கும்படி பிராட்டி பிரதானையாய்ப் பரிமாறினாள் என்று திருவுள்ளம் பற்றி யதாகப் பெரியவாச்சான்பிள்ளை அருளினார். *மயா ஸார்த்தம்* என்னும் ச்லோகமும் *ஸஹ யுக்தேSப்ரதாநே* என்னும் பாணினி ஸூத்ரமும் இப்படி வ்யாக்யானமிடுவதற்கு நியாமகம். இது ச்ருங்கார ப்ரகரணமாகையாலே (நாடகத்திலே) காதல் விளை யாட்டுக்களைக் காணவந்த (சோழ) அரசனைப் போலே அப்ரதான னாய் தூரநிற்கும்படி என்று நாம் விவரித்தோம்.

*வாநராம்ஸ்தா து வாச ஹ* (ரா-யு-17-4) என்னுமிடத்தில் தாந் என்னும் பதம் ஸுக்ரீவனைக் காட்டிலும் வானரர்களுக்குப் பரிவில் ப்ராதாந்யத்தைக் காட்டுகையாலே. ராமபிரான் விஷயத் தில் பரிவை பார்க்கும்போது. அரசனான சுக்கிரீவனையும் காண வந்த சோழரைப்போலே (அப்ரதானனாக) ஆக்கும்படி பரிவில் மிக்கவரான வானரர்களைப் பார்த்து என்று பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திக்குக் கருத்துரைத்தோம். இதுபோலவே வேறு ரஸத்தில் ப்ராதாந்ய அப்ராதான்யங்களைக் காட்டும் ப்ரகரணங்

களில் இத்தொடர் வழங்கப்பட்டிருந்தால் அங்கு அந்த ரஸத்தை ப்ரதானமாகக் கொண்ட கேளிக்கையைக் காணவந்த சோழராகவே கருத்துரைக்க வேண்டும். இதில் தவறு எதுவுமில்லை.

நாம் அரும்பதவுரைகாரர் உரைத்த கருத்தை அடியோடு மறுக்கவில்லை *அஸ்மிந் மயா* என்ற ச்லோகம் ச்ருங்கார ரஸ ப்ரதானமாகையாலே, மல்யுத்தத்தைக் *காணவந்தசோழர்* என்பதைச் சற்று மாற்றி, *காதல் நாடகத்தைக் காணவந்த சோழர்* என்று அமைத்தோம். வில்லி வலம் ஸ்வாமி சோழர் என்னும் பதம் க்ருமிகண்டன் போன்ற விஷ்ணுத்வேஷமுடைய சோழரைக் குறிக்கும் என்று திருவுள்ளம் பற்றுகிறார். இப்படி நிர்வஹிப்பதில் எச்சுவையுமில்லை என்பதைச் சிறிது விளக்குவோம். சோழ அரசர்கள் அனைவரும் விஷ்ணு த்வேஷமுடையவர்களல்லர் என்று சரித்திரம் அறிந்தவர்கள் அறிவார்கள். விஷ்ணுகோயிலை இடிப்பது, கட்டாயப்படுத்திக் கையெழுத்து வாங்குவது, கண்ண னடியார்களைக் கண்ணைப்பிடுங்குவது முதலான கொடுஞ்செயல் களைப் புரிந்தவன் க்ருமி கண்டன் ஒருவனே. அவனை நம் பூர்வாசார்யர்கள் *அவ்யபதேசய்யன்* (பெயர் சொல்லிக்குறிக்கத் தகாதவன்) என்று குறிப்பார்களேயொழிய சோழர் என்று குறிக்க மாட்டார்கள். காணவந்த சோழர் என்னும் தொடரிலோ, சோழர் என்று சோழ அரச்ர்களைப் பொதுவாகக் குறித்திருக்கிறது. வில்லி வலம் ஸ்வாமியின் நிர்வாஹம் சிறிதும் பொருந்தாது என்பது பெரிய வாச்சான்பிள்ளை பெருமாள் கருத்தாகவும், வால்மீகி மஹர்ஷி யின் கருத்தாகவும் அருளிய வாக்யங்களை அவர் கருத்துப்படி விவரித்துப் பார்த்தால், எவர்க்கும் விளங்கும்.

அப்படிப்பார்த்தால் நாமுங்கூடக் காணவந்த க்ருமி கண்டன் (அல்லது அவனைப்போன்ற சோழன்) போலே அப்ரதானனாய்க் கடக்க நிற்கும்படி (காதல் பரிமாற்றத்திலே) ஸீதையுடைய திறமை இருந்தது என்று முதல் வாக்யத்தை விவரிக்கவேண்டும். காணவந்த க்ருமிகண்டன் என்னும்படி பரிவில் அப்ரதானரான ஸுக்ரீவ மஹாராஜர் பரிவில் ப்ரதானரான வானரர்களைக் குறித்துச் சொன்னார் என்று இரண்டாவது

வாக்யத்தை விவரிக்க வேண்டும். இதில், காதல் பரிமாற்றத்திலோ, அல்லது பரிவிலோ க்ருமிகண்டனைப் போன்ற சோழர்களுக்கு எவ்வித அந்வயமும் இல்லாத தோடன்றியில் காதலுக்கும், பரிவுக்கும் எதிர்த்தட்டான த்வேஷமேயிருக்கையாலே, சோழ அரசர்களுக்கு (முறையே காதலிலும் பரிவிலும்) அப்ரதானமான அன்வயத்தைச் சொல்லும் காணவந்த சோழர் என்னும் தொடருக்கு க்ருமிகண்ட ஸ்வபாவர்களைச் சொல்லுவதில் எப்பொருத்தமும் இல்லை என்பதை நடுநிலை யாளர் நன்குணர்வார்கள்.

*வித்வான்துரை திருவேங்கடம், திருநாகேச்வரம்*

57 . இவ்வூருக்கு அருகிலுள்ள திருவிண்ணகரில் [உப்பிலி யப்பன் திருக்கோயிலில்] 61-ஆவது ஆண்டு திருக்கல்யாண மஹோத்ஸவ இசைவிழா நிகழ்ச்சியில் 1-11-76 திங்கள் அன்று இரவு ஹரி கதா பூஷணம் நீடாமங்கலம் திரு.கிருஷ்ணமூர்த்தி பாகவதர் "காளிங்க நர்த்தனம்" ஹரிகதை நிகழ்த்திய போது, "சிவன் பார்வதி நர்த்தனப் போட்டியின் போது முருகன் வாகனமான மயிலிடமிருந்து விடுபட்ட பாம்பு, பிள்ளையார் துதிக்கையில் புகுந்ததினால், அவர் தாளத்திற்குப் பொருந்தாமல் குதிக்க, அப்போது மத்தளம் வாசித்துக் கொண்டிருந்த நாராயணன் அந்த நடனத்தை, எதிர் காலத்தில் 'காளிங்க நர்த்தனம்' செய்ய மனத்திலே 'அங்குரார்ப்பணம்' செய்து கொண்டார்" என்றும் "கடலில் தோன்றிய விஷத்தை விடவும் திருமகள் விஷத் தன்மை உடையவள். அதனால்தான் விஷத்தை உண்ட சிவன் தீங்குறாது ஆனந்த நடனமாடுகிறான். திருமகளாகிய கொடிய விஷத்தைப் பெற்ற திருமால் எழுந்திருக்கவே முடியாமல் தூங்கிக் கொண்டிருக்கிறான்" என்று ஒரு புலவர் கூறியுள்ளதாக உபன்யசித்தார். இவற்றின் உண்மையை எடுத்தியம்பக் கேட்டுக்கொள்கிறேன்.?

ஸர்வேச்வரனான நாராயணனின் பெருமை யைப் பொறாத அத்,வைதிகளும், சைவர்களும் இத்தகைய நூற்றுக் கணக்கான பொய்க்கதைகளையும், கற்பனைகளையும் தங்கள் நூல்களில் 300 வருடங்களாகப்பெய்து வைத்திருக்கின்றனர்.

இதனால் சிவன், சக்தி, பிள்ளையார் முதலான தங்களுடைய இஷ்ட தெய்வங் களுக்கும் தாழ்வு வருகிறதே என்று கவனிக்காமல் தனக்கு ஒரு கண் போனாலும், பக்கத்து வீட்டுக்காரனுக்கு இரண்டு கண்ணும் போனால் நல்லது என்னும் மனப்பான்மையுடன் சைவாத்வைதிகளான உபந்யாஸகர்கள் இவற்றைப் பரப்பி வருகின்றனர்.

விஷ்ணு கோயில்களில் இத்தகைய கைகொட்டிச் சிரிக்கத் தக்க பொய்க்கதையைப் பிரசாரம் செய்தது மன்னிக்க முடியாத குற்றம். இதை அதிகாரிகள் பார்த்துக் கொண்டிருந்தது அதைவிடப் பெரிய குற்றம். சைவாத்வைதிகளே பெரும்பான்மையினராயுள்ள அறநிலைய இலாகாவிடம் நாம் இத்தகைய விஷயங்களில் நியா யத்தை எதிர்பார்க்க முடியாது. இத்தகைய ஹரி (த்₃வேஷக்) கதைகளுக்குப் போகாமலிருப்பதே வைஷ்ணவர்கள் செய்யக் கூடியது. ஒரு வேளை கேட்க நேர்ந்தாலும். "*நின்பால் பொறுப் பரியனகள் பேசில் போவதே நோயதாகி*"என்று தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச்செய்த ரீதியில், இதைக்கேட்டவுடன் செவி புதைத்துக் கொண்டு அவ்விடத்தைவிட்டு அகல்வதையா வது வைஷ்ணவர்கள் செய்யலாம். இப்படி எத் தனை வைஷ்ணவர்கள் செய்தார்கள் என்பது ஆராயத் தக்கது.

V. *ஸ்ரீநிவாஸன் திருச்சி –17.*

**58. "சில வேதவாக்யங்களில் இன்ன இன்ன வழியில் போய்ப் பகவானை அடைவாயாக என்று சொல்லியிருக்கிறது; அது சகுண மாக இருக்கும்படியான பெருமானைப் பற்றிச் சொல்லுவது. நிர்க் குணமாக இருக்கும் பரமேசுவரனைப் பற்றிச் சொல்லுகிறபோது '*நல்ல பக்குவம்*' அடைகிற ஆத்மா எந்த இடத்தில் இருக்கிறதோ, அந்த இடத்தைவிட்டு வேறு எங்கும் போகவேண்டியதில்லை. அவன் இருக்கும் இடத்திலேயே அந்த அனுக்கிரஹம், மோட்சம் அவ னுக்குக் கிடைத்துவிடுகிறது", என்று 1976 நவம்பர் கலைமகளில் "*வெள்ளிப்பழமோட்சம்*" என்னும் கட்டுரையில் காமகோடிப் பெரியவாள் கூறியிருப்பது உண்மையா?**

வேத₃த்தில் 'ஸகு₃ணம்' 'நிர்க்கு₃ணம்' என்று இரண்டு ப்₃ரஹ்மங்களைப் பற்றிச் சொல்லவே யில்லை. ஒரே ப்₃ரஹ்மமாகிற ஸ்ரீமந்நாராய ணனை ஸகலகல்யாண கு₃ணங்களையும் உடை யவனாயிருப்பதால்'ஸகு₃ணம்' என்றும், ஸத்வம், ரஜஸ், தமஸ்ஸு எனும் ப்ரக்ருதி கு₃ணங்களும், தாழ்ந்த கு₃ணங்களும் இல்லாமலிருப்பதால் நிர்க் கு₃ணம் என்றும் வேத₃ம் சொல்லுகிறது என்பதே உண்மை.

"நிர்க்குணமாக இருக்கும் பரமேசுவரன் என்னும் வார்த்தை அத்₃வைதமே தெரியாத பாமரர்கள் சொல்லக் கூடியதேயொழிய, ஒரு அத்₃வைத பீடாதி₄பதி சொல்லக் கூடியதல்ல. *'பரமேச்வரன்'* என்ற சொல்லே பரமத்வம், ஈஶ்வரத்வம் ஆகிய இரு கு₃ணங்களை உடைய கல்யாண கு₃ணங்களோடு கூடிய பரப்₃ரஹ்மத்தையே குறிக்கக் கூடியது. நிர்விஶேஷசிந்மாத்ர ப்₃ரஹ்மம் என்று அத்₃வைதிகள் கற்பனை செய்யும் ப்₄ரஹ்மத்தைக் குறிக்க மாட்டாது.

மேலும், ஆதிஶங்கரர் கீ₃தா ப₄ாஷ்யத்தில் *"மயிதே₃வே பரமேஶ்வரே ஸர்வஜ்ஞே ஸர்வாத்மநி வாஸுதே₃வே"(3-30)* *என்றும், "பரமேஶ்வரம் விஷ்ணும்"* (8-5) என்றும், *"மயி-வாஸுதே₃வே பரமேஶ்வரே"* (4-35) என்றும், *"பரமேஶ்வரம் - நாராயணம்"* (7-15) என்றும், *"விஷ்ணோ: பரமேஶ்வரஸ்ய* (12-20) என்றும், *"மயி பரமேஶ்வரே ஸர்வஜ்ஞே பரமகு₃ரௌ வாஸு. தே₃வே"* (13-18) என்றும், *"பரமஶ்சாஸௌ ஈஶ்வரஶ்ச - ஈஶ நஶீலஶ்ச இதி பரமேஶ்வர:"* என்றும் பலவிடங்களில் பரமேஶ வரன் விஷ்ணு வென்றும் வாஸுதே₃வன் என்றும் சொல்லப்படும் நாராயணனே என்று கல்வெட்டாகக் காட்டியிருக்கிறார். இப்படி யிருக்கும் போது பெருமாளைக் காட்டிலும் வேறொருவன் பரமேஶ்வரன் என்று உரைப்பது ஆசார்யத்₃ ரோஹம் தவிர வேறில்லை.

*ராஜகோபாலன், பங்களூர் –11*

**59. 38,39** பதில்களில் கூறியபடி, இந்திரன் முதலான தே₃வதைகளைக் கூறும் மந்திரங்களைச் சொல்லிவிட்டு,

**அத்தே₃வர்களுக்கு அந்தர்யாமியான நாராயணனையே அவை சொல்லுகின்றன என்று கற்பனை செய்து கொள்வதைக் காட்டிலும் அம்மந்திரங்களைச் சொல்லாமலே இருந்து விடலாமே?**

நித்யமான வேத₃மந்திரங்களை அவ்வக்கர்மங்களின் போது ஓதும்படி எம்பெருமான் சாஸ்த்ரங்களில் ஆணையிட்டிருக் கிறான். எல்லா தேவர்களும் தன் சரீரமாகையாலே அவர்களைக் குறிக்கும் எல்லாச்சொற்களும் தன் வரையில் குறிக்கும் என்னும் உண்மையை உணர்த்துவதற்காகவே பல தேவதைகளைப் பற்றிய மந்திரங் களைக் கொண்டு நித்ய நைமித்திக கர்மங்களைச் செய்யும்படி ஆணையிட்டிருக்கிறான் எம்பெருமான். ஆகையால் இம்மந்திரங் களை ஓதாமலிருப்பது அவனுடைய ஆணையை மீறுவதாகும். எல்லா தே₃வதைகளுக்கும் அவன் அந்தர்யாமியாக இருப்பதால், இந்திரன் முதலான எல்லா சப்தங்களும் அவனையும் குறிக்கும் என்பது உண்மையேயொழியக் கற்பனையல்ல. அந்தந்த தேவதைகளை மாத்திரம் அந்தந்த சப்₃த₃ங்கள் குறிக்கின்றன என்று கருதுவதே உண்மையில் கற்பனையாகும்.

*தேவராஜன், பம்பாய் – 37.*

**60. "த்விதீயாத்₃வை ப₄யம் ப₄வதி" என்னும் வேத₃ வாக் யத்தின் பொருள் என்ன?**

ப்₃ருஹதா₃ரண்யக உபனிஷத்தில் (3-4-2) வருவது இந்த வாக்யம். ப்₃ரஹ்மம் ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் நான்முகனைப் படைத்தது என்றும். அந்த நான்முகன் தனியாயிருந்ததினால் ப₄யப் பட்டான் என்றும். "*நமக்கு எதிரியாய் வேறொருவரும் இல்லையே*". என்று ஆலோசித்தபின் அவனது ப₄யம் நீங்கிற்று என்றும் சொன்ன பின்பு "*கஸ்மாத்₃ த்₄யபேஷத் த்₃விதீயாத்₃வை ப₄யம் ப₄வதி*" (இந்த நான்முகன் எதனால் பயப்பட்டான்? (எதிரியாக) இரண்டாமவன் இருந்தாலன்றோ ப₄யப்படவேண்டும்) என்று "பயப்பட வேண்டாத போதும், கர்மவசப்பட்டவனாகையாலே பயப்பட்டான் நான்முகன்" என்று இவ்வாக்யத்தில் நான்முகனுடைய தாழ்வைக் காட்டுகிறான் வேத₃புருஷன். விஷ்ணு சித்தவிஜயம் முதல் அத்தியாயம் முதல்

பாகம் 370, 371ஆம் பக்கங்களில் இவ்வாக்யம் விவரிக்கப் பட்டிருக் கிறது. இவ்வாக்யம் அத்₃வைதிகளுக்கும் ஸாத₄கம் என்னும் வாத₃த்தை ஸ்ரீதே₃ஶிகன் ஶததூ₃ஷணியில் கண்டித்துள்ளார்.

S.K. *ராமராஜன், சென்னை – 4.*

**61. எங்களாழ்வானுக்கு அந்தப் பெயர்வரக் காரணத்தையும் அவர் வைபவத்தையும் விளக்கப் பிரார்த்திக்கிறேன்.**

எங்களாழ்வான் திருவெள்ளறையில் அவதரித்தவர்; அவரு டைய இயற்பெயர் விஷ்ணுசித்தர் என்பது. அவருக்கு எங்களாழ் வான் என்ற பெயர் ஏற்படக்காரணம் பின்வரும் கர்ணபரம்பரைச் செய்தியால் விளங்குகிறது:- "எம்பெருமானார் ஸாதிக்க ஸ்ரீபாஷ் யத்தை ஏடுபடுத்தி வந்தவர் கூரத்தாழ்வான். கூரத்தாழ்வான் அஸம்மதி தோற்ற இருந்தால், எம்பெருமானார் வாக்யராசிகளைச் சீர்திருத்தம் செய்து ஸாதிப்பது என்னும் நியமத்துடன் இக்காரியம் நடந்துவந்தது. க்ருமிகண்டன் உபத்ரவத்தால் கூரத்தாழ்வான் கண்ணிழந் தமையாலே ஸ்ரீபாஷ்யம் நிறைவு பெறாமலிருந்தது. எம்பெருமானார் மேல்நாட்டிலிருந்து திரும்பி எழுந்தருளியபிறகு அவர் திருவடிகளில் ஆஶ்ரயித்த விஷ்ணு சித்தரைக் கொண்டு முற்கூறிய நியமத்துடனே இக்காரியம் பூர்த்தியடைந்தது.

அப்போது விஷ்ணு சித்தருடைய மேதா விலாஸத்தைக் கண்ட எம்பெருமானார், அவரை '*எங்கள் ஆழ்வான்!*' என்று அபிமானித்ததாகவும், அதிலிருந்து அவருக்கு '*எங்கள் ஆழ்வான்!*' என்ற பட்டப்பெயர் ஏற்பட்டதாகவும் கூறுகின்றனர். எம்பெருமானா ருடைய மருமகனாகிற நடாதூராழ்வானுடைய பேரரான '*நடாதூரம் மாள்*' என்னும் வாத்ஸ்யவரதாசார்யருடைய ஆசார்யராகையாலே, எங்களாழ்வானுக்கு ஏற்பட்ட '*அம்மாளாசார்யர்*' என்னும் பெருமையை இன்றும் எங்களாழ்வான் வம்ஶஸ்தர்கள் வகித்து வருகிறார்கள். "*தினவுகெடச் சொல்லுவன் திருவெள்ளறைச் சோழியன்*" என்று நடாதூராழ்வான் தமது பேரரிடம் சொல்லி, ஸ்ரீபாஷ்ய கால க்ஷேபம் கேட்கக் காஞ்சியிலிருந்து அவரைத் திருவெள்ளறைக்கு அனுப்பினார் என்றும் கூறுகிறார்கள். எங்களாழ்வானருளிய பல

நூல்களில் '*விஷ்ணு சித்தீயம்*' எனும் விஷ்ணுபுராண வ்யாக்யான மொன்றே இப்போது காணக் கிடைக்கிறது.

**62. திருக்குறளும், திருவாய்மொழியும் பலவிடங்களில் ஒத்த சொல் தொடைகளை உடையவையாய் இருக்கின்றன. காலத்தால் முற்பட்டது எது? குறட்பாக்களிலிருந்து திருவள்ளுவர் பரம வைஷ்ணவர் என்பது விளங்குகிறதல்லவா?**

ஸம்ப்ரத$_3$ாய க்$_3$ரந்த$_2$ங்களில் நம்மாழ்வார் கலியுக$_3$ ஆதியில் அவதரித்தவர் என்று உள்ளது. ஆராய்ச்சியாளர்கள் கி.பி.எட்டு அல்லது ஒன்பதாவது நூற்றாண்டில் அவதரித்தவர் என்கிறார்கள். இது எப்படியிருந்த போதிலும், திருக்குறளிலே வைஷ்ணவ மதக் கருத்துகள் ஆங்காங்கு உள்ளன என்பது தெளிவு. வேத$_3$த்தில் சொல்லப்பட்ட தெய்வங்களில், விஷ்ணு ஒருவனுக்கே ஈரடியால் உலகளந்த பெருமை, தலைசிறந்த உலகத்துக்குத் தலைவனா யிருக்கும் பெருமை ஆகியபரம் பொருட்கேயுரிய பெருமைகளை அவர் குறளில் கூறியுள்ளார்.

சிவன் முதலான வேறு எந்த தெய்வத்திற்கும் திருக்குறளில் இத்தகைய பெருமை கூறப்பட்டதில்லை. திருக்குறள் சங்க காலத்தை ஒட்டி எழுந்த நூலாகையாலே, திருவள்ளுவர் காலத் தில் சங்க காலத்திற் போலே திருமாலின் பரத்துவம் அனைவரா லும் ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தது என்பது தெளிவு. அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலைப் பற்றியே திருக்குறள் எழுதப்பட்டிருப்பதால், பரம்பொருளைப் பற்றிய குறிப்புகள் அவரது நூலில் மிகுதியாக இல்லை. இதைப் பயன்படுத்திக் கொண்டு சைவர்கள் அவரை நாயனார் ஆக்கிவிட்டார்கள்; பல மதத்தவர் அவர் தங்கள் மதத்தைச் சேர்ந்தவரே என்று கூறிக்கொள்கின்றனர்.

T.K. *முகில்வண்ணன், சென்னை – 17.*

**63. நித்யமான வேதத்திற்கு மதிப்புக்கொடுத்து கௌர விக்காமல், அநித்யமான ப்ரபந்தங்களுக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் மதிப்புக்கொடுத்து கௌரவிப்பது ஏன்?**

வேதத்திற்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் மதிப்புக் கொடுத்து கௌரவிப்பதில்லை என்பது தவறு. அப்படி எவராவது மதிப்புக் கொடுக்காமலிருந்தால் அவர் ஸ்ரீவைஷ்ணவராகார். ஆனால், ***"செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளியவோதி, தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே"*** என்று ஸ்ரீவேதாந்த தேசிகர் அருளிச்செய்தபடியே, பரம்பொருளைத் தெளிவாகக் காட்டுவதில் வேதத்தைக் காட்டிலும், திவ்யப்ரபந்தங்களே மிகவும் உபகரிப்பதால், ஸ்ரீவைஷ்ணவர்கள் வேதத்தைக் காட்டிலும் திவ்ய ப்ரபந்தங்களுக்கு அதிகமான மதிப்பு கொடுக்கிறார்கள். இதில் ஸம்ப்ரதாய பேதம் இருக்க நியாயமில்லை.

S.*கோவிந்தாசாரி, சென்னை—61.*

**64. விகடன் இதழ்களில், ஆழ்வார்கள் திருவேங்கடமலையில் திருவேங்கடமுடையானை ஸேவிக்கமுடியாமல், திருக்கோடிக் காவல் என்னும் ஊரில் பிள்ளையாரைத் துணைக் கொண்டு, திரிபுரசுந்தரியை ஸேவித்தார்கள் என்றும், அவள் திருவேங்கட முடையானாக அவர்களுக்குக் காட்சியளித்தாள் என்றும், முக்கோடி மந்திரங்களுக்கு நாராயணன் தான் முக்தியளிக்க முடியாமல், சிவனிடம் வேண்டி முக்தியளிக்கச் செய்தார் என்றும் காசியாத்திரைக் கட்டுரையில் பரணீதரன் எழுதி, இத்தலபுராணத்தை ஒரு வைஷ்ணவ வித்வான் தனக்கு வரிவரியாக வாசித்து அர்த்தம் சொன்னதாக எழுதியிருப்பது பற்றிய உண்மையை விளக்க வேண்டுகிறேன்.**

காமகோடி பீடாதிபதியைத் தலைவராகக் கொண்ட சைவாத்வைத எழுத்தாளர்கள் வைணவத்துக்கு எவ்வகையிலாவது தீங்கிழைப்பதையே குறிக்கோளாகக்கொண்டு செயல்படுகிறார்கள் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு. இன்றுள்ள அத்வைதிகள் பெரும்பாலும் அத்வைத மதத்தையோ, அல்லது ஆதிசங்கரருடைய கொள்கைகளையோ, அவர் தனது கொள்கை களுக்கு ஆதாரமாகக் காட்டியிருக்கும் ப்ரமாணங்களையோ அடியோடு அறியாதவர்கள்; ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தங்களையும், அவற்றுக்கு ஏற்பட்டிருக்கும் ஆச்சரியமான விரிவுரைகளையும்,

அவர்களைப்பற்றிய சரித்திர நூல்களையும் கேட்டே அறியாத வர்கள் ; சில நூறு வருடங்கட்குள், வைணவத்தை இழிவு படுத்த வேண்டுமென்றே கற்பிக்கப்பட்ட ஸ்தல புராணக் கதைகளையே வேதமாக நினைப்பவர்கள் என்பது காசியாத்திரைக் கட்டுரைகளி லிருந்து தெளிவாக விளங்குகிறது. பரணீதரன் எழுதியிருப்பவை சிறுவர்களும் கைகொட்டிச் சிரிக்க வேண்டிய கதைகள்.

ஆதிசங்கரருடைய பாஷ்யங்களில் சிறிதளவு ஞானம் இருந்தாலும், நாராயணன் ஒருவனே முக்தியளிக்க வல்லவன், சிவன் முதலானார்க்கு அந்த சக்தி கிடையாது என்பதை பரணீதரன் உணர்ந்து கொண்டிருப்பார். அந்த ஞானத்தை அவருக்கும், அவரைப் போன்றவர்களுக்கும் ஊட்ட வேண்டிய வைஷ்ணவ வித்வான்கள், காமகோடியாலும், அவர் சிஷ்யர்களாலும் கிடைக் கும் பணம், புகழ் முதலானவற்றுக்கு ஆசைப்பட்டு, இத்தகைய பொய்க்கதைகளை அவர்களுக்குச் சொல்லி மதத்ரோஹம் செய் கிறார்கள். இக்கதைக்கு அர்த்தம் சொன்ன வைஷ்ணவ வித்வானை சமீபத்தில் ஐக்ய வைஷ்ணவ மகாநாட்டில் நேரில் கண்டு கேட்ட போது, தான் செய்தது தப்புதான் என்று நம்மிடம் ஒப்புக்கொண்டார். இத்தகைய பொய்க்கதைகளைப் பரப்புவதன் மூலம், விகடன் தனது வைஷ்ணவ த்வேஷத்தைக் காட்டிக்கொள்வதோடல்லாமல், அறிவுள்ளவர்கள் இகழத்தக்க நிலையையே அடைகிறது.

*வேங்கடம், சமயபுரம்.*

**65. மார்க்கண்டேய மஹரிஷியும், கோச்செங்கட் சோழ னும் தங்கள் தங்கள் மதத்தவரென்று சைவர்களும், வைணவர்களும் கூறிக்கொள்ளுகிறார்கள். இதில் எது உண்மை?**

இரண்டிலும் உண்மை உள்ளது. அவர்கள் இருவரும் முதலில் சிவப$_4$க்தர்களாயிருந்து, பிறகு விஷ்ணுப$_4$க்தர்களாக மாறினார்கள் என்பதே உண்மை. சிவபுராணங்களில் சிவப$_4$க்த ராகப் படிக்கப்படும் மார்கண்டேயர்தாமே, மஹாபாரதத்தில் பரமவிஷ்ணு பக்தராகவும், (நைமித்திக) ப்ரளயகாலத்தில் பகவான் வயிற்றிற்குள் புகுந்து உலகனைத்தையும் அவ் வயிற்றில் கண்டவராகவும் தம்மைக் கூறிக்கொண்டிருக்கிறார்.

"புக்கடிமையினால் தன்னைக்கண்ட மார்க்கண்டே யனவனை, நக்கபிரானும் அன்று உய்யக்கொண்டது நாராயணன் அருளே" (திருவாய் 4-10-8) முதலான பாசுரங்களில் நம்மாழ்வார் - அவர் முதலில் சிவபக்தராயிருந்து சிவனை மோக்ஷம் கேட்க, சிவனும் "அது என்னால் தரமுடியாது; நாராயணனே தரவேணும்" என்று கூறி, நாராயணனிடம் அழைத்துச்சென்று, அவருக்கு மோக்ஷமளிக்கும்படி சிபாரிசுசெய்ய, நாராயணனும் அதையேற்றுத் தன்னடியானாக்கி, இறுதியில் மோக்ஷமளித்தார்-என்னும் செய்தியைப் பாடியுள்ளார்.

கோச்செங்கட்சோழன் முற்பிறப்பில் திருவானைக்காவில் ஓர் சிலந்தியாயிருந்து வலைபின்னி சிவலிங்கத்துக்குக் குடைபிடிக்க, சிவபக்திகொண்ட ஓர் யானை அந்த லிங்கத்துக்குத் தினந்தோறும் அபிஷேகம் செய்ததனால் அச்சிலந்திவலை தினந்தோறும் அழிய, இது கண்டு சினங்கொண்ட சிலந்தி யானையின் துதிக்கையில் புகுந்து, அதைக் கடித்துத் துன்புறுத்த, யானை துதிக்கையை ஓங்கி யோங்கி அடித்ததனால் சிலந்தியும், விஷத்தால் யானையும் இறக்க, மறு ஜன்மத்தில், சிவபூஜை செய்த புண்ணியத்தால் சிலந்தி கோச்செங்கட் சோழன் என்னும் சிவபக்த அரசனாகப் பிறந்து, யானையிடம் த்வேஷம் நீங்காமையால் யானை ஏற முடி யாதபடி பல படிகளைக் கொண்ட கோயில்களைச் சிவனுக்குக் கட்டினான் என்று சைவர்கள் கூறுவார்கள். இதை அப்படியே ஏற்று, அவன் கடைசியில் விஷ்ணு பக்தனானதைத் திருமங்கையாழ்வார், "*இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோள் ஈசற்கு எழில் மாடம் எழுபதுசெய்து உலகமாண்ட திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில் திருநறையூர் மணிமாடம்*" (பெரிய திருமொழி 6-6-8) "*செம்பியன் கோச்செங்கணான் சேர்ந்த கோயில்*" (பெரிய திருமொழி 6-6-1) என்று பாடியிருக்கிறார். இச்செய்திகள் இரண்டும் "*ஈச்வராத் ஜ்ஞாநமந்விச்சே₂த் மோக்ஷமிச்சே₂த் ஜநார்த்த₃நாத்*" [சிவனிடமிருந்து மோக்ஷமளிக்கவல்லவன் யார் என்னும் அறி வைப் பெறலாம். நாராயணனிடமிருந்து மோக்ஷத்தையே பெறலாம்] என்னும் ஸுப்ரஸித்₃த₄மான வசனத் தோடு பொருந்தியுள்ளன.

P. *சார்ங்கபாணி, கும்பகோணம்.*

**66. 9.12.76 தினமலரில் '*அப்பர் செய்த புரட்சி*' என்னும் தலைப்பில், கந்தபுராணத்தொடர் சொற்பொழிவில் பேசுகையில் "எல்லாம் அறிந்தவனும், ஆக்கல், அழித்தல், ஒடுக்கல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில்களை உடையவனும், சர்வேசுவரனும், தனிப்பெரும் தலைவரும் ஆனவர் பசுபதி, இங்ஙனம் கூறும் வேத உபநிடதங்களை ஓதியும் சில பேதைமாக்கள் 'சிவபெருமானே' பரம்பொருள் என்று உறுதி யின்றி உளறுகிறார்கள் கண்ணன் காட்டிய விசுவரூபம் அண் டத்தில் அடங்கும். முருகன் காட்டிய விசுவரூபம் அண்டத்தில் அடங்காது" என்று வாரியார் பேசியிருப்பது பற்றிய உண் ண்மயை விளக்க வேண்டுகிறேன்.**

வடமொழியில் உள்ள வேதசாத்திரங்கள் பற்றிய அறிவில்லாத வாரியார், அவைகளை ஓதி உணர்ந்த ஆதிசங்கரர், ஸ்ரீராமாநுஜர், மத்வர் முதலான வைதிக மஹாசார்யர்கள் விஷ்ணுவைப் பரம்பொருளாகவும், சிவன் முருகன் முதலானாரை ஜீவர்களாகவும் பேசியிருப்பதுபற்றிக் கேள்விப்பட்டு, '*உளறுகிறார்கள்*' என்று அவர்களை வைவதின் மூலம் தன் வயிற்றெரிச்சலைத் தீர்த்துக் கொள்ளப் பார்க்கிறார். '*எந்தப் புளுகும் கந்தபுராணத்தில்*' என்று பெயர்பெற்ற கந்தபுராணத்தைக்கூட வடமொழி மூலத்தைப் படித்துப் புரிந்துகொள்ள சக்தியற்ற இவர், கச்சியப்பர் செய்த தமிழ்க் கந்தபுராணப் பாடல்களைச் சொல்லிப் பாமரமக்களை ஏமாற்றி வருகிறார்.இவர் புரிந்துகொள்ள முடியாத வடமொழி வேதசாத் திரங்கள் ஒருபுறமிருக்கட்டும். தமிழில் உள்ள பரிபாடல், திருமுருகாற்றுப்படை முதலான சங்க இலக்கியங்களை இவர் பார்க்கலாமே! அவற்றில் நூற்றுக்கணக்கான இடங்களில் திருமாலே அனைத்துலகையும் ஆக்கி, அளித்து, அழித்து, முக்தியளிக்கவல்ல வேதமுதல்வனான பரம்பொருள் என்று பாடியிருப்பதையும், சிவனுக்கோ, முருகனுக்கோ அத்தகைய பெருமைகளைப் பாடவில்லை என்பதையும் நேர்மாறாக, ஐந்தாம் பரிபாடலில் சிவனும் பார்வதியும் புணர்ந்து வீர்யம் விழுந்ததினால் பிறந்தவன் முருகன் என்று பாடியிருப்பதையும் மனமிருந்தால்

இவர் படிக்கலாமே! எல்லா உலகுமாக (விச்வரூபமாக) விரிந் திருப்பவன் திருமாலே என்று சங்ககாலச் சான்றோர்கள் முழங்கி யிருப்பதையும், முருகனைப் பற்றிய பல பாடல்களில் ஓரிடத்திற்கூட அப்படிச் சொல்லவில்லை யென்பதையும் கண்ணிருந்தால் இவர் காணலாமே!

மன மிருந்தும் மதியிலிகளாய், கண்ணிருந்தும் குருடர் களாக இவர்கள் உளறுவதைக்கண்டு சாஸ்திர ஞானமில்லாத பாமரமக்கள் மயங்காமலிருக்க, நமது விஷ்ணுசித்த விஜயம் சாதி மத ஆராய்ச்சி முதலானவற்றில் வேதசாத்திரங்களைக் கொண்டும் சங்க இலக்கியங்கள் முதலான பழந்தமிழ் நூல்களைக் கொண்டும் நாம் நிலைநாட்டியிருக்கும் உண்மைகளை நமது அன்பர்கள் பரப்ப முன்வரவேண்டும். மதத்துறையில் பொய்ப்பேய்கள் தலை விரித்தாடும் இந்நாட்டில், உண்மை வடிவான பரம்பொருளுக்குச் செய்யக்கூடிய பெருந்தொண்டு இதுவேயாகும்.

V. *ஸ்ரீநிவாஸன், திருச்சி 17.*

**67. ஒரே மஹர்ஷி உண்டாக்கிய ஒரே கோத்ரத்தையும், ஒரே ஸூத்ரத்தையும் சார்ந்தவர்களாய், ஒரே வேதத்தை ஓதும் அந்தணர்கள், இன்று மதவேதாந்தக் கொள்கையில் வெவ் வேறுபட்டு நிற்கும் அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத் வைதம், சைவம், வைஷ்ணவம், சாக்தம் முதலான பற்பல மதத்தினராய்ப் பிரிந்து நிற்கிறார்கள். அந்தந்த மதத்திற்குத் தக்கவாறு வெவ்வேறு மதக்குறிகளை இட்டுக்கொள்கிறார்கள். கோத்ரஸூத்ரங்களை உண்டாக்கிய வேதமந்திரங்கண்ட ரிஷிகள் காலத்தில், இவற்றில் எந்த மதவேதாந்தக் கருத்துக்களும், மதக்குறியும் அவர்களால் பின்பற்றப்பட்டுவந்தது என்று எப்படி நிர்ணயிப்பது?**

பழையசுருதி ஸ்ம்ருதி இதிஹாச புராண நூல்களையும், இன்றுள்ள மதங்களை நிலைநாட்டியவர்களின் நூல்களையும், சங்க இலக்கியம் முதலான பழந்தமிழிலக்கியங்களையும் நடுநிலைநின்று ஆராய்வதன்மூலமே சிக்கலான இக்கேள்விக்குத் தெளிவான விடையைக்காண முடியும். கசுயபர். வஸிஷ்டர்,

விஶ்வாமித்ரர், பரத்வாஜர் முதலான ரிஷிகள், வேதமந்திரங் களைக் கண்டவர்களாகவும், இன்றுள்ள கோத்ரங்களுக்கு மூலபுருஷர்களாகவும் எல்லா அந்தணர்களாலும் அநுஸந்திக்கப் படுகின்றனர். இவர்களில் கஶ்யபர் வாமனமூர்த்திக்கே தந்தை யாயிருந்த பெருமையையும், வஸிஷ்ட விஶ்வாமித்ரர்கள் ஸ்ரீராம பிரானுக்கே ஆசார்யராயிருந்த பெருமையையும் பரத்வாஜர் ஸ்ரீராமபிரானுக்கே விருந்திட்ட சீர்மையையும், பெற்ற பரம வைஷ்ணவர்கள் என்பது - ஆதிகாவியமும், இதிஹாஸஶ்ரேஷ்டமு மான ஸ்ரீராமாயணத்திலிருந்தும், வேதவியாஸர் அருளிய ஐந்தாம் வேதமாகப் புகழ்பெற்ற பாரதத்திலிருந்தும், வேதவியாஸருக்கும் தந்தையாய், வேதமே கொண்டாடிய பெருமைபெற்றவரான ஸ்ரீபரா ஶரமஹர்ஷி அருளிய ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலிருந்தும், மற்ற ஸாத்விக புராணங்களிலிருந்தும் அறியக்கிடக்கிறது.

மஹாபாரதத்தை இயற்றிய வேதவ்யாஸர் பரமவைஷ் ணவர் என்பது அந்நூலைப் பார்த்தாலே தெரியவரும். அவரது சிஷ்யரென்று பிரஸித்தி பெற்றவர் போதாயனர்; அவரது சிஷ்யர் களாகப் பிரஸித்தி பெற்றவர்கள் ஆபஸ்தம்பர் முதலான மற்ற ஸூத்ரகாரர்கள் வேதவ்யாஸரது சிஷ்யப்ரஶிஷ்டர்களாக அந்தணர் அனைவராலும் இசையப்பெற்ற இந்த ஸூத்ரகாரர்கள் பரமவைஷ்ணவர்களாகவே இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு. மநு முதலான ஸ்ம்ருதிகளில் விஷ்ணு பரத்வமே முழங்கப்பட்டிருப்பதையும், மற்ற தேவதைகளுக்குப் பரத்வம் சொல்லப்படவில்லை என்பதையும் அந்த ஸ்ம்ருதிகளைப் பார்த்தாலே தெரியும். இதிஹாஸங்களான ஸ்ரீராமாயண மஹா பாரதங்களிலும் விஷ்ணுபரத்வமே நிலைநாட்டப்பட்டுள்ளது. புராணங்களில்தான் பலவகை மதக்கருத்துக்கள் உள்ளன. அவற்றில் விஷ்ணுபரத்வம் சொல்லுபவை ஸாத்விகங்கள் என்றும், பிரமனுக்குப் பரத்வம் சொல்லுபவை ராஜஸங்கள் என்றும், சிவன் முதலானார்க்குப் பரத்வம் சொல்லுபவை தாமஸங்கள் என்றும், மோக்ஷத்தை விரும்பும் ஸாத்விகர்களான யோகிகள் ஸாத்விக புராணங்களையே பற்றிநின்று மோக்ஷமடையவேண்டும் என்றும்

மாத்ஸ்யம் முதலான பல புராணங்களிலேயே பேசப் பட்டுள்ளது. இந்த ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களுக்கெல்லாம் மூலமாய், அந்தணர் அனைவரும் ஓதும் வேதமே - "*தேவதை களுள் அக்னி மிகத்தாழ்ந்தவன்; விஷ்ணு மிக உயர்ந்தவன்*" (யஜுஸ்ஸம்ஹிதை 5-5) என்றும், *விஷ்ணுவே!, முக்காலத்திலுமுள்ள எவனும் உன் பெருமையின் மேல் எல்லையை அறியமாட்டான்* (ருக்மண்டலம் 7-6-99) என்றும் விஷ்ணுபரத்வத்தை மிகத் தெளிவாக ஓதிற்று, "*உலகில் காண்பனவும் கேட்பனவுமான எல்லாப் பொருள்களின் உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிறான் நாராயணன்*" (தை-நா-11) நாராயணன் ஒருவனே ஆதியில் இருந்தான்; பிரமனும் இல்லை, ஈசானனுமில்லை (மஹோபனிஷத்) நாராயணனிடம் இருந்து பிரமன் உண்டாகிறான்; நாராயணனிடமி ருந்து உருத்திரன் உண்டாகிறான் (நாராயணோபனிஷத்) முதலான (ஆயிரம் வருடங் களாகப் பூர்வாசார்யர்கள் அனைவரும் கையாண்டு வரும்) உபனிஷத் வாக்யங்களிலும் இவ்விஷயம் கல்வெட்டாக விளங்குகிறது.

இதனாலேயே வேதமோதிய அந்தணர் தலைவர்களான ஆதிசங்கரர், ராமாநுஜர், மத்வர் எனும் த்ரிமதஸ்தாபகாசார்யர் களும் தமது பாஷ்யங்களில் விஷ்ணுபரத்வத்தையும், சிவன், சக்தி முதலான மற்ற தேவதைகளின் தாழ்வையும் பலவிடங்களில் பொறித்து வைத்தார்கள். இம்மதாசார்யர்களுக்குப் பிற்பட்ட காலத்தில்தான் ஸ்ரீகண்டபாஷ்யம் முதலான ஏட்டிக்குப் போட்டியாக சிவபரத்வத்தை ஸாதிக்க முயலும் நூல்கள் வடமொழியில் கற்பிக்கப்பட்டன; பல புது உபநிஷத்துக்களும், ஆதிசங்கரரின் பெயரில் பல தெய்வத்துதிநூல்களும் கற்பிக்கப்பட்டன.

தமிழ் இலக்கியங்களைப் பார்த்தாலும், மிகப் பழைய சங்க நூல்களில் திருமால் ஒருவனே வேதமுதல்வனான பரம்பொருளாகப் பாடப்பட்டிருக்கிறான் என்பதையும், சிவன், முருகன் முதலான மற்ற தெய்வங்கள் அப்படிப் போற்றப்படவில்லை, சக்தியுடைய ஜீவர்களாக மாத்திரமே பாடப்படுகிறார்கள் என்பதையும், எட் டாவது நூற்றாண்டுக்குப்பிற்பட்ட நாயன்மார்கள் காலத்தில்தான்

திருமாலுக்குத் தாழ்வைச் சொல்லும் தாமஸ புராணக்கதை களையும் சிவாகமங்களையும் ஆதாரமாகக் கொண்டு சிவபரத்வம் சொல்லத் தொடங்கியிருக்கிறார்கள் என்பதையும் காண்கிறோம். இவையனைத்தையும் நடுநிலை நின்று பார்த்தால், வேதங்கண்ட வர்களும், கோத்ரஸூத்ர ப்ரவர்த்தகர்களுமான ரிஷிகளுடைய காலத்தில் வைஷ்ணவமே வைதிகமதமாகக் குலாவப்பட்டது என விளங்குகிறது.

ஸ்ம்ருதிகளையும், இதிஹாஸங்களையும், சங்க நூல்களை யும் ஆராய்ந்தால், உலகம் பொய் என்னும் அத்வைத மதக் கொள் கையோ, உலகம் ப்ரஹ்மத்திடமிருந்து மிகவும் வேறுபட்டது என்னும் த்வைதக்கொள்கையோ அவற்றில் ஏற்கப்படாமல், உலகமும் ப்ரஹ்மமும் *ஶ*ரீராத்மபாவத்தால் ஒன்று பட்டவை என்று அந்தர் யாமி ப்ராஹ்மணமாகிற வேதாந்த பாகத்தில் நிலைநாட்டப்பட்ட விசிஷ்டாத்வைத ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்தமே (முக்கியக் கொள்கையே) ஆதரிக்கப் பட்டுள்ளது என்பதைக் காண்கிறோம். இதிலிருந்தும், (வேதவ்யாஸரின் சிஷ்யரான) போதாயன மஹ ரிஷியின் விரிவான ப்ரஹ்ம ஸூத்ர வ்ருத்தியைப் பின்பற்றியே தாம் ஸ்ரீபாஷ்யம் இயற்றுவதாக ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யத்தின் ஆதியில் அருளியிருப்ப திலிருந்தும் ஸூத்ரகோத்ரப்ரவர்த்தகர்களான ரிஷிகள் வைஷ்ண வர்களாயிருந்ததோடன்றியில் விசிஷ்டாத்வைதி களாகவும் இருந்தனர் என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

இனி, இப்படி வைஷ்ணவர்களென்று அசைக்க முடியாமல் தேறிய பண்டைக்கால ரிஷிகள் வைஷ்ணவமான சின்னங்களையே தரித்திருக்கவேண்டும். இன்றும் வைதிக வைஷ்ணவர்கள் அனைவரும் ஊர்த்வபுண்ட்ரமே தரிக்கிறார்கள். வேதாந்த தேசிகர் ***த்ருதோர்த்வபுண்ட்ர: க்ருதசக்ரதாரீ விஷ்ணும் பரம் த்யாயதி யோ மஹாத்மா*** என்னும் மஹோபனிஷத்தின் மந்திரத்திலிருந்தும் மற்ற பல *ஶ்*ருதி ஸ்ம்ருதி புராண வாக்யங்களிலிருந்தும் ஸ்ரீவைஷ்ணவர் கள் *ஶ்*வேதம்ருத்திகை (வெள்ளை மண்) கொண்டு ஊர்த்வ

புண்ட்ரம் தரிப்பதே சிறந்தது என்று நிலைநாட்டியிருக்கிறார். ப்ரஸித்தமான தபோபனிஷத்துக்களிலும், ஸ்ரீராமாயணாதிகளிலும், மந்வாதி ஸ்ம்ருதிகளிலும் ஊர்த்வ புண்ட்ரத்தைப் பற்றிப் பேச்சில்லையே என்று சிலர் கலங்குகிறார்கள். இதற்கு பதில்: எல்லாவற்றிலும் எல்லாம் இருக்கவேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. மேலும், இந்நூல்களில் த்ரிபுண்ட்ரம் (நீறுபூசுதல்) பற்றியும், பேச்சில்லையாகையால், இந்தவாதம் எவர்க்கும் துணை புரியாது. ஆக, விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ மதமே வேதங் கண்டவர்களும் ஸூத்ரகாரர்களுமான ரிஷிகள் ஆதரித்தது என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

*செல்வப்பெருமாள், நாகல்கேணி, சென்னை-44.*

**68. [அ] அண்மையில் மஞ்சரி பத்திரிகையில் வைத்ய ராமன் என்பவர் ஐயப்பன் விக்ரஹம் ஒன்றைப் பற்றி தாத்தாசாரி யாருக்கும், அப்பைய தீக்ஷிதருக்கும் நடந்த போட்டியில் தாத்தாசார்யார் தோற்றார் என்று எழுதியிருப்பதற்கு ஆதாரம் உண்டா?**

**[ஆ] தமிழ் அகராதி ஒன்றில் சுவாமி மணவாளமாமுனிகள் திருக்குருகூரிலிருந்த ஒரு சிவாச்சார்யரிடம் தோற்றார் என்று எழுதியிருப்பதற்குச் சான்று உண்டா?**

**[இ] தன்னிடம் வாதம் புரிந்தவர்களின் காதுகளைக் குறும்பியளவும் குடைந்த வில்லிபுத்தூராரை அருணகிரிநாதர் வென்றார் என்று கூறப்படுவதில் உண்மையுண்டா?**

ஶ்ருதிஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களைக் காட்டித் தங்கள் மதத்தை நிலைநாட்டி வைணவர்களை வெற்றிபெற இயலாத சைவர்களும், அத்வைதிகளும் இட்டுக்கட்டிய அப்பட்டமான பொய்க்கதைகள் இவை. இவற்றுக்கு எந்த ஆதாரமும் கிடையாது. இத்தகைய பொய்க்கதைகளைப் பற்றிக் கொண்டே சைவம் இன்று உலகில் நடமாடி வருகிறது.

*S.வேங்கடம், சமயபுரம்*

**69. பரணீதரன் விகடனில் காசியாத்திரைக் கட்டுரையில்,**

**கஞ்சனூரில் ஓர் வைஷ்ணவர் சைவராக மாறி ஹரதத்தர் என்னும் பெயர் பூண்டு சிவபரத்வ நிர்ணயம் செய்தார் என்று எழுதி வரு கிறாரே, இதில் உண்மை உண்டா?**

முன் கேள்வி பதிலில் காணப்படும் பொய்க்கதைகள் போன்றதே இக்கதையும். ஹரதத்த சிவாச்சாரியார் என்பவர் குருக்கள் குலத்தைச் சேர்ந்தவர். விசிஷ்டாத்வைத த்வைத வைஷ்ணவாசார்யர்கள் நூற்றுக்கணக்கான நூல்களில் அசைக்க முடியாதபடி வேதம் முதலான ஸகல ஶாஸ்த்ரங்களையுங் கொண்டு விஷ்ணுபரத்வ நிர்ணயம் செய்திருப்பதைக் கண்டு வயிறெரிந்த ஹரதத்தர், சில நூல்களைச் செய்து சிவபரத்வ நிர்ணயம் செய்ய முயன்றார். விசிஷ்டாத்வைத த்வைத மதா சார்யர்களாலே இந்நூல்களிலுள்ள வாதங்கள் பல நூல்களில் நிரஸிக்கப்பட்டுவிட்டன.

இதுகண்டு பொறாத சைவ ஸமூஹம் ஹரதத்தரைப்பற்றிப் பொய்யாக ஸமீபகாலத்தில் இட்டுக்கட்டிய கதையையே பரணீ தரன் எழுதிவருகிறார். பெரியாழ்வார் பாண்டியராஜ ஸதஸ்ஸிலே எல்லா மதத்தைச் சேர்ந்த வித்வான்களையும் வென்று கிழியறுத்து விஷ்ணுபரத்வ நிர்ணயம்செய்த விருத்தாந்தம் ஆயிரம் வருடங் களாகப் பல நூல்களில் ஏறிக்கிடக்கிறது. இன்றும் இது நடந்த இடம் ***மெய்காட்டும் பொட்டல்*** என்னும் பெயருடன் மதுரையில் விளங்குகிறது.

இதற்குப் போட்டியாக சைவர்கள் கற்பித்திருக்கும் ஹரதத் தர் கதைக்குப் பழைய நூல்களில் ஒரு ஆதாரங்கூடக் கிடையாது. பாமரஜனங்கள் படிக்கும் பிரபல பத்திரிகைகளில் பொய்களை விடாமல் பிரசாரம் செய்து வந்தால் அது காலக்கிரமத்தில் உண்மையாகிவிடும் என்னும் எண்ணத்திலேயே விகடன், கல்கி போன்ற பத்திரிகைகள் இத்தகைய பொய்க் கதைகளை விடாமல் பரப்புகின்றன. அறிவாளிகளும், ஆராய்ச்சியாளர்களும் இவைகளைக் கண்டு ஒருநாளும் ஏமாறமாட்டார்கள்.

*கே. நாதமுனி, திருப்பத்தூர்.*

**70. சென்னை-1, மாணவர் மன்றத்தின் சார்பில் வெளிவரும் "*நித்திலக்குவியல்*" என்னும் பத்திரிகையின், டிசம்பர் 76 இதழில் சமயச் சார்பு கடந்த கவிஞர் கம்பர் என்னும் தலைப்பில் பேராசிரியர் புலவர் இ.பா.வேணுகோபால் M.A.B.T. அவர்களால் கம்பனை சமரச வாதியாகத் தீட்டிக் கட்டுரை எழுதப்பட்டுள்ளது. இது பற்றி அவர்க்கு விளக்கம் எழுதவேண்டுகிறேன்.**

கட்டுரை எழுதிய பேராசிரியருக்கு - கம்பன் சிவவிஷ்ணு சமரசவாதி என்னும் பொய் வாதத்தைத் தகர்த்தெறியும் நமது கம்பனின் சமய நூலை அனப்பியிருக்கிறோம். நேர்மையிருந்தால், நமது கம்பனின் சமயத்திற்கு மறுப்பெழுதித் தம் கொள்கையை நிலைநாட்ட அவர் முன்வரலாம்.

*வெ. மங்களலக்ஷ்மீ, குள்ளஞ்சாவடி.*

**71. ஸ்ரீ, ஸ்ரீமாந், ஸ்ரீமதி, ஸ்ரீமத், ஸ்ரீமதே, ஸ்ரீ.உ.வே., ஸ்ரீமதுபயவே, பரமஹம்ஸேத்யாதி என்பதின் பொருள் வேறுபாடுகளை விளக்க வேண்டுகிறேன்.**

'*ஸ்ரீமாந்*' என்பது செல்வமுடையவன் (திருவுடையவன்) என்னும் பொருளுடையது. தமிழில் திருவாளர் என்பது இதுவே. இதற்குப் பெண்பால் '*ஸ்ரீமதி*' இவற்றில் '*மாந்*' '*மதி*' என்பதை மதுப்ரத்யயம் என்று வடமொழியிலக்கணத்தில் வழங்கப்படும் விகுதியாகும். இதைத் தமிழில் திருமதி என்றாக்கிப் பலர் வழங்குவது தவறு. '*திருவாட்டி*' அல்லது '*ஸ்ரீமாந்*' '*ஸ்ரீமதி*' இரண்டையும் சுருக்கமாக '*ஸ்ரீ*' அல்லது '*திரு*' என்றே குறிப்பிடலாம்.

ஸ்ரீமத் என்று தனிப்பதமாகத் தமிழில் வழங்குவது தவறு. ஸ்ரீமதே என்பது வடமொழியில் ஸ்ரீமாந் என்னும் பதத்தின் நாலாவது வேற்றுமை. திருவுடையவனுக்கு என்று பொருள். ஸ்ரீ.உ.வே., ஸ்ரீமதுபயவே என்னும் இரண்டு - உபயவேதாந்தங்களும் (தென்மொழி வேதாந்தமாகிற அருளிச்செயலும், வடமொழி வேதாந்தமும்) வல்ல ஸ்ரீவைஷ்ணவ வித்வான்களைக் குறிக்கும் அடை

மொழிகளாகும். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி என்னும் அடைமொழி ஸ்ரீவைஷ்ணவ ஸந்யாஸிகளுக்கே வழங்குவதாகும்.

R. *பொன்னப்பன், மதுரை–16.*

**72. '*அஹம் ப்ரஹ்மாஸ்மி*' [நானே ப்ரஹ்மம்] என்று கருதுவது ஆத்மாபஹாரம்தானே?**

'***அஹம் ப்ரஹ்மாஸ்மி***' (நானே ப்ரஹ்மமாகிறேன் என்பது ஓர் உபனிஷத் வாக்யம். '***யஸ்யாஸ்மி ந தமந்தரேமி***' (யஜுர் ப்ராஹ்மணம் அஷ்டகம் 3-7) (நான் எந்தப் பரம்பொருளுக்கு அடிமையாயிருக்கிறேனோ, அப்பரம்பொருளைவிட்டு நீங்குவேனல்லேன்) '***பதிம் விஸ்வஸ்ய***' (தை-நா) (உலகிற்குப் பதிநாராயணனே) முதலான பல வேதவாக்யங்களுக்கு முரணில்லாமல் பொருள் கொள்ளும்போது, '***அஹம்ப்ரஹ்மாஸ்மி***' என்னும் வாக்யம், நான் ப்ரஹ்மத்திற்கு விட்டுப்பிரியாத *ப*ரீரமாயிருக்கிறேன் என்றே பொருள்படும். இப்படியல்லாமல் தனக்கும் ப்ரஹ்மத்திற்கும் ஸ்வரூபைக்யத்தைப் பொருளாகக் கொண்டால், '***நானே பரம்பொருள்***' என்ற ஹிரண்யனின் மதமாகவே அது ஆகும்.

"***யோSந்யதா ஸந்தமாத்மாநம் அந்யதா ப்ரதிபத்யதே! கிம் தேந க்ருதம் பாபம் சோரேணாத்மாப ஹாரிணா***" (பாரதம் - உத்யோக 42-35) (ஒருவிதமாக இருக்கும் ஆத்மாவை மற்றொரு விதமாக (தவறாக) நினைப்பதாகிற ஆத்மாபஹாரத்தைச் செய்பவனால் என்ன பாபம் தான் செய்யப்படவில்லை?) என்னும் மஹாபாரத ச்லோகத்தையொட்டி பார்க்கும்போது இது ஆத்மாபஹாரமும் ஆகும்.

V. *ஸ்ரீநிவாஸன், திருச்சி–17.*

**73. திருமங்கையாழ்வார் பகவத்பாகவத கைங்கர்யம் செய்வதற்காக, பொன்மயமான புத்த விக்ரஹத்தைக் கொள்ளையடித்ததும், வழிப்பறி செய்ததும் நியாயமாகுமா? இக்காலத்தில் அப்படிச் செய்ய முடியுமா?**

நம்மைப் படைத்த கடவுளையே இல்லை செய்யப்பார்க்கும் நன்றி கொன்ற மதம் புத்த மதம். இத்தகைய மதத்தைப் பரப்புவதற்காக ஏற்பட்ட புத்தவிஹாரத்திலிருந்த பொற்சிலையைக் கவர்ந்து, பரமாத்மாவான அரங்கனின் கோயிலுக்குத் திருமதிள் கைங்கர்யம் செய்ததும், பொன்னையும் பொருளையும் தங்களுக்காகக் குவித்து வைத்துக்கொண்டு, நற்காரியங்களில் செலவிடாதிருந்த துஷ்ட ப்ரபுக்களின் செல்வத்தை வழிப்பறிசெய்து, பாகவத ததீயாராதனம் செய்ததும் வெறும் நியாயம் மாத்திரமல்ல: பரம தர்மமேயாகும். மேலெழப் பாபமாகத் தோன்றினாலும், *மந்நிமித்தம் க்ருதம் பாபமபி புண்யாய கல்பதே* [ எனக்காகவும் ,என்னடியார்களுக்காகவும் செய்யப்பட்ட பாபமும் புண்ணியத்தின்பாற் படுவதே] என்ற பகவத் வசனத்தைக் கொண்டு பார்க்கும் போது இது புண்யமே என்று விளங்குமன்றோ. இக்காலத்தில் இப்படிச் செய்யவல்ல அதிகாரிகள் இல்லை: பல அநர்த்தங்கள் நேருமாகையால், செய்ய முடியாது. செய்யவும் கூடாது.

K.M. *ராமானுஜ அய்யங்கார் ஸ்வாமி, தென்திருப்பேரை.*

**74. 47–ஆவது பதிலில் சொல்லப்பட்ட ப்ராக்ருதமான பிறப்பையுடைய ஐயப்பனை ஹரிஹரபுத்ரன் என்கிறார்களே அது உண்மையா? வைஷ்ணவர்களும் சிலர் சபரிமலைக்குச் செல்வது தகுமா?**

'*ஹரி*' புருஷோத்தமன் என்று சொல்லப்படுபவர், அப்ராக்ருதமானவர். அவருக்கு எந்த ஸ்த்ரீயோடுங்கூட ப்ராக்குருதமான புணர்ச்சி கிடையாது. அப்படியிருக்கும்போது அவர் மோகினியாகப் பெண்வேஷம் பூண்டபோது, காமவசப்பட்ட ஹரனோடு எப்படிப் புணர்ச்சி ஏற்பட்டிருக்கமுடியும்? சிவன் காமவசப்பட்டு மோகினியைத் துரத்தி ஓடும்போது வீர்யம் விழுந்தது: அந்த வீர்யம் விழுந்தவிடங்கள் பொன்னும் வெள்ளியும் விளையுமிடங்களாயின என்று ஸ்ரீபாகவதம் (8-12-33) கூறுகிறது. தேவவீர்யமாகையாலே ஒரு தெய்வமாகி ஶாஸ்தா (ஐயப்பன்) என்று பெயர்பெற்றது என்று சைவ புராணங்கள் கூறுகின்றன. பெண்வேஷம் பூண்ட

புருஷோத்தமனைத் தொடர்ந்தோடி வீர்யம் விழப்பெற்றது சிவனுக்குச் சிறுமையேயொழியப் பெருமையல்ல என்பதைக்கூட அறியாத அறிவிலிகள், ஐயப்பனை ஹரிஹரபுத்திரன் என்று கூறுவதையும் அற்பபலன்களை விரும்பி, (கொண்டி மாட்டுக்குத் தடிகட்டி விட்டதுபோலே) இருமுடியைத் தலையாலே சுமந்து கொண்டு ஐ(ே)ய(ா)(அ)ப்பா என்று ஓயாமல் கத்திக் கொண்டு யாத்திரை செய்வதையும் நாம் எப்படித் தடுக்க முடியும்? இதைப் படிக்கும் அன்பர்கள் இதை எடுத்துச்சொல்லி வைஷ்ணவர்கள் இவ்விழிநிலைக்குச் செல்லாதபடி தடுக்க முயலலாம். அவனவனுடைய புண்யபாபங்களுக்குத் தகுந்தபடி அவனவன் அற்பபலன்களுக்காக ராஜஸதாமஸ தெய்வங்களை ஆ*ஶ்*ரயிப்பதை எளிதில் திருத்திவிடமுடியாது. அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே என்றார் ஆழ்வாரும். காது கொடுத்துக் கேட்பவர்களுக்கு எடுத்துச் சொல்வதே நாம் செய்யக்கூடியது.

V. *ரங்கராஜன், ஸ்ரீரங்கம்.*

**75. கடவுட்கொள்கைகள் மனிதனை நெறிப்படுத்தச் சிற்சிலரால் ஏற்படுத்தப்பட்டவை என்பது சரியா? கடவுட் கொள்கைகளிடையே வேற்றுமைக்குக் காரணம் என்ன? எது தலைசிறந்த கடவுட் கொள்கை என்பதை எப்படி நிர்ணயிப்பது?**

இது சரியல்ல. உலகில் உள்ள பெரும்பாலான மதநூல்களைப் பார்க்கும்போது, அவை தலைசிறந்த பண்பாளர்களுடைய அநுபவங்களேயொழிய, ஒரு சிலரால் கற்பிக்கப்பட்டவையல்ல என விளங்கும். ஆகையால், கடவுளாகிற பரம்பொருள் அவரவர் கர்மத்திற்கும், குணங்களுக்கும் ஏற்ப ஒவ்வொரு தேசத்தில் ஒவ்வொரு மத ஞானிக்குத் தன்னைப் பற்றி ஒவ்வொரு விதமான அநுபவத்தை அளித்திருக்கிறது என்றே தேறுகிறது. இவ்வனுபவங்களிடையே ஏற்படும் வேற்றுமைக்குக் காரணம் அவரவர் கர்மமும், அதனால் ஏற்படும் முக்குணங்களில் உள்ள ஏற்றத்தாழ்வுமே என்பதைத் தெளிவுபடுத்துகையாலே வைதிகமதம் மற்ற மதங்களைக் காட்டிலும் சிறப்புற்றதாகிறது. புண்யம் பாபம் என

இருவகைப்பட்ட இக்கர்மம் ஒன்றான பரம்பொருளின் நிக்ரஹ அநுக்ரஹரூபமானதே என்பதைத் தெளிவுபடுத்துகையாலே. வைஷ்ணவம் வைதிகமத்தின் மற்ற பிரிவுகளைக் காட்டிலும் சிறப்புற்றதாகிறது.

**76. இந்தியா முழுவதிலும் ஓரு உயர்ந்த IMAGE [புகழுருவம் அல்லது மதிப்பு] ஏற்படுத்தப்பட்டுள்ள காமகோடிகளைப் பற்றித் தாக்கி எழுதுவது உறைக்குமா?**

பத்திரிகைகளால் நடமாடும் தெய்வமாக்கப்பட்டுள்ள காமகோடிகள் செய்யும் தவறான ப்ரசாரங்களை அம்பலப் படுத்துவது உண்மைக்குச் செய்யும் பெரிய சேவையாகும். இது பொது மக்களுக்கு உறைத்தாலும், உறைக்காவிட்டாலும் உண்மைக்கு மதிப்பு வைப்பவர்கள் ஆதரிக்க வேண்டியதே யாகும். உண்மையே பரம்பொருளின் வடிவம் என்று எல்லா மதங்களும் ஒப்புக் கொள்கின்றன.

**77. கீதாசாரியன் [பகவான்] சாதிகள் முதலிய மனிதப் பிரிவுகளை வலியுறுத்துவது ஏன்?**

பிறவியிலேயே மனிதனுக்கு மனிதன் எத்தனையோ வேற்றுமைகள் இருப்பதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். இதற்குக் காரணம் - அவனவன் முற்பிறவிகளில் செய்த நல்வினை தீவினைகளும், அதனால் அவனது உடம்பிலும், உள்ளத்திலும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களில் ஒன்று மிகுந் திருப்பதும்தான் என்று கீதாசார்யன் காட்டுகிறான். இதை அடிப் படையாகக்கொண்டு, புருஷஸூக்தம் முதலான வேதங்களையும் அநுஸரித்து, கீதாசார்யன் நாலு வர்ணங்களைத் தானே படைத்த தாகக் கூறியிருப்பதில் குறைசொல்ல என்ன இருக்கிறது? பாஸ் வெல் எழுதிய Dr. ஜான்ஸனைப் பற்றிய சரித்திரத்தில் ஓர் விஷயம் உள்ளது. சாதிப்பிரிவினையை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா? என்று பாஸ்வெல் Dr. ஜான்ஸனைக் கேட்க, 'நாய், குதிரை முதலான விலங்குகளிடையே சாதியிருக்கும் போது, மனி தனிடமும் இருக்கிறது என்று கொண்டால் என்ன குறை?'

நாய்களிடையே Mastif என்னும் நாய் உயர்ந்த சாதியாயிருப்பது போலே, மனிதகுலத்துக்கே ப்ராஹ்மணன் உயர்ந்த சாதியாவான்'' என்று மஹாமேதாவியான டாக்டர் ஜான்ஸன் கூறினார் என்று பாஸ்வெல் எழுதியிருப்பது ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது.

**78. இந்த இருபதாம் நூற்றாண்டில் சாதிப்பிரிவுகளின் முக்கியத் துவம் குறித்து ஸுதர்சனரின் கருத்து என்ன?**

சாதிமத வேற்றுமைகள் எல்லாம் ஒழியவேண்டும் என்று அரசியல் மேடைகளிலும், பத்திரிகைகளிலும், வானொலியிலும் ஓயாமல் கேட்கும் கூச்சலால் காதுகள் செவிடுபட்டு, பொதுமக்கள் மூளைச்சலவை செய்யப்பெற்றிருக்கும் காலம் இவ்விருபதாம் நூற்றாண்டு. இக்கூச்சலால் வேற்றுமைகளும், தீமைகளும் குறைந்திருக்கின்றனவா, அதிகமாயிருக்கின்றனவா என்பதை அறிவாளிகள் ஆழ்ந்து சிந்திக்கவேண்டும். அப்படிச் சிந்தித்தால், சாதிமத வேற்றுமைகளால் சில தீமைகள் விளைந்திருந்த போதிலும், பல்லாயிரக்கணக்கான வருஷங்களாக தெய்வ நம்பிக்கை முதலான பல நன்மைகளும் ஏற்பட்டுள்ளன என்பதும், இவை ஒழியவேண்டும் என்றும் இந்நூற்றாண்டில் ஏற்பட்டுள்ள கூச்சலால்- ஜனங்கள் தெய்வ நம்பிக்கையும் மதநம்பிக்கையுமற்று விலங்குகளாக மாறிக்கொண்டிருப்பது முதலான பல தீமைகள் எற்பட்டுவருகின்றன என்பதும் நடுநிலையாளர்களான அறிவாளி களுக்கு நன்கு விளங்கும்.

முற்கூறிய கூச்சலால் இந்நூற்றாண்டில் சாதிப்பிரிவுகள் முக்கியத்துவத்தை இழந்துவிட்டன. மதப் பிரிவுகள் முக்கியத்து வத்தை இழந்துவருகின்றன. இந்நிலை போய் மதங்களுக்காவது முக்கியத்துவம் எற்பட்டால்தான் இருப்தோராம் நூற்றாண்டில் இந்நாடு மேல்நாடுகளைப் போலே லோகாயத நாடாக ஆகாமல் தப்பமுடியும். பாரதநாட்டின் எதிர்காலம் அறிவாளிகள் இந் நிலையை உணர்ந்து செயல்புரிவதைப் பொறுத்தே உள்ளது.

**79. சாதாரண தேவதைகளின் பக்தர்கள் பெருகி, அவர்களது வலிமை ஓங்கியிருப்பதன் காரணம் என்ன?** பரமாத்மாவாகிற

**பகவான் விஷ்ணுவின் பெருமை எப்போது உலகெங்கும் நிலைநாட்டப் பெறும்?**

க்ருதயுகத்தில் தர்மமாகிற பசு நான்கு கால்களில் நின்றது என்றும், த்ரேதாயுகத்தில் அப்பசுவுக்கு ஒரு கால் நொண்டியாகி விட்டது என்றும், த்வாபரயுகத்தில் இருகால்கள் நொண்டியாகி விட்டன என்றும், கலியுகத்தில் மூன்று கால்கள் நொண்டியாகி விட்டன என்றும் நம் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ளது. கலிக்குச் சற்று முன் வாழ்ந்த கண்ணனே கீதையில் "என்னை உள்ளபடி அறிபவர்கள் எவருமில்லையே! பலர் மற்ற தெய்வங் களையே பற்றுகிறார்களே! என்னை த்வேஷிப்பவர்களும் மிகுதி யாயுள்ளனரே!" என்று வருந்தியிருக்கிறான். கலி முற்றிவரும் இக்காலத்தில் இந்நிலையிருப்பது குறித்து நாம் ஆச்சரியப்பட வேண்டியதில்லை.

இதற்கு முக்கியகாரணம் - கலியுகத்தில் பெரும்பாலான வர்கள் புலனின்பத்தையும், அதை அளிக்கும் பொருளையுமே விரும்புகிறார்கள்; இக்காரணத்தினாலேயே இப்பலன்களால் நன்மை ஏற்படுமா என்பதை ஆராயாமல் அவற்றை எளிதில் அளிக்கும் மற்ற தெய்வங்களைப் பற்றுகிறார் கள் பெரும்பாலோர். "*பொலிக பொலிக பொலிக..... கலியும் கெடும்.....திரியும் கலியுகம் நீங்கி.....பெரிய கிருதயுகம் பற்றிப் பேரின்பவெள்ளம் பெருக*" (திருவாய்மொழி 5-2) என்று ஆழ்வார் அருளிய ரீதியில் எம்பெருமானார் அவதரித்து, ஓரளவுக்குக் கலியுகத் தன்மையை மாற்றியதாலேயே இன்று நாம் உண்மை வைணவர்களை இந்த அளவுக்காவது காணமுடிகிறது. கலியுகத்தின் இறுதியில் கல்கி பகவானாலே துஷ்டர்கள் அழிக்கப்பட்டு க்ருதயுகம் தொடங்கும் போதுதான் பரமாத்மாவின் பெருமை உலகெங்கும் நிலை நாட்டப்பெறும்.

*வடநாட்டில் வாழும் ஓர் தென்னாட்டு அன்பர்*

**80. '*தொக்குப் பல்லாண்டிசைத்துக் கவரி செய்வர்***

*ஏழையரே'* [திருவாய் 7-7-11] *'தீர்த்தங்களே என்று பூசித்து நல்கி உரைப்பர் தம் தேவியர்க்கே'* [திருவாய் 7-10-11] முதலான திருவாய்மொழிப் பாசுரங்களில் ஸ்ரீவைகுண்டத்தில் பெண்கள் இருப்பதாகவும், நித்ய ஸூரிகளுக்கு மனைவியர் இருப்பதாகவும் விளங்குகிறது. விஷ்வக்ஸேனருக்கு ஸூத்ரவதி என்னும் பெயருடைய மனைவியிருப்பதாகவும், கருடனுக்கு ருத்ரா, ஸுகீர்த்தி என்னும் இரு மனைவியர் இருப்பதாகவும் கூறப் படுகிறது. முக்தர்களினும் அமாநவகரஸ்பர்ஶமானவுடன் பெண் களாவார் உண்டா? யார் அப்படி ஆகிறார்கள்? பரம பதத்தில் பெண் களுக்கு வேலை என்ன?

முக்தியடைந்த ஜீவன் பரமபநத்திற்குச் சென்றவுடன் அவனை ப்ரஹ்மத்திற்குரிய அலங்காரத்தாலே பெண்கள் அலங்கரிக்கிறார்கள் என்று கௌஷீதகி என்னும் உபநிஷத்தும் ஓதிற்று. நம்மாழ்வாரும் திருவாய் 5-8-11; 6-1-11 ஆகிய பாசுரங் களில் பரமபதத்தை அடையும் முக்தர்களிடம் பெண்கள் பெருங்காதல் கொள்வதாகவும், அவர்களுக்கு அடிமை செய்வ தாகவும் அருளிச்செய்தார். பரமபதநாதனுக்குப் போலே விஷ்வக் ஸேனர், அனந்தன், கருடன், ஸுதர்சனாழ்வான் முதலான நித்யஸூரிகளுக்கும் பத்னிகள் உண்டு என்று பாஞ்சராத்ராதி சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. ஆகையால் வசநபலத் தாலே இவற்றை நாம் ஒப்புக்கொண்டே தீரவேண்டும்.

ஆனால், ப்ராக்ருதமான இவ்வுலகில் பெண்கள் போன்று உடலுறவுக்காக ஏற்பட்டவர்களல்லர் இவர்கள். அப்ராக்ருதமான பெண்ணுருக்கொண்டவர்களாய், அவ்வுலகிலும் பாகவதஶேஷத்வ கைங்கர்யங்களில் நிலைநிற்பவர்கள் என்று இவர்களைக் கொள்ளவேண்டும். நித்யஸூரிகளுக்குக் கைங்கர்யம் செய்வ தோடன்றியில், அவர்கள் பகவத்பாகவத கைங்கர்யம் செய்யும் போது அதற்குத் துணையாக (எடுத்துக் கைநீட்டுவ தற்காக) இருப்பது அவர்களுடைய பத்னிகளுடைய வேலை என்று கொள்ளவேண்டும். இதேபோல், பெரியபிராட்டியார் முதலான பரமபதநாததேவிகளுக்குக் கைங்கர்யம் செய்வதற்காகவும்,

பரமபதத்தையடையும் முக்தர்களை அலங்கரிப்பதற்காகவும் பெண்ணுருக்கொண்ட கணக்கற்ற நித்யஸூரிகள் இருக்கிறார்கள் என்று ப்ரமாணங்களிலிருந்து விளங்குகிறது.

இனி, முக்தர்களில் பெண்ணுருக்கொள்வார் உண்டா என்னும் கேள்வி எழுகிறது. பரமபதத்தில் பெண்ணுருக் கொண்டு பகவத்பாகவதாநுபவ கைங்கர்யங்கள் செய்யவிரும்புகிறவர்கள் பெண்ணுருக்கொள்வார்கள் என்பது இதற்கு பதில்.

நம் ஸம்ப்ரதாயத்தின்படி நித்யமுக்தர்களுக்கிடையே எவர்க்கும் பரமமோக்ஷத்தில் ஆனந்ததாரதம்யம் இல்லையா னாலும், அவரவர் ப்ரதிபத்தி எனப்படும் விருப்பத்தை ஒட்டிக் கணக்கற்ற ஆகாரதாரதம்யங்கள் இருக்கலாம். அந்த ரீதியில் - இவ்வுலகில் ஓர்பரமபாகவதருக்குப் பத்னியாயிருந்து, அவரை யொழியத் தேவுமற்றறியாதவளாய், பரமபதத்திற்குச் சென்றாலும் அவர் விஷயமான அநுபவ கைங்கர்யங்களையே செய்ய வேண்டும் என்று விரும்பியிருக்கும் ஓர் பதிவ்ரதாசிரோமணி யிருந்தாளாகில், அவள் பரமபதம் சென்றாலும், அப்ராக்ருதமான பெண்ணுருக்கொண்டு அந்த பாகவதோத்தமர் விஷயமாகவே எப்போதும் அநுபவ கைங்கர்யங்களைச் செய்துகொண்டும், அவருகந்த பகவத்பாகவத கைங்கர்யங்களைச் செய்துகொண்டும் இருக்கத்தடையில்லை என்று கண்டுகொள்ளலாம்.

V.*ஸ்ரீநிவாஸன், திருச்சி–17.*

81. '***மொய்த்த வல்வினை உள்நின்று***' [திருமாலை – 4] என்னும் பாசுர வ்யாக்யானத்திலும், மற்றும் சில பாசுரங்களின் வ்யாக்யானங்களிலும் '***ஸமிதைமிடாமாணி***' என்னும் சொல் வருகிறது. இச்சொல்லுக்கு '***சுப்பிலாலேதன்னை வளைத்துச் சூழ்த்துக்கொண்டு கிடக்கும் ஒரு ஜந்து விசேஷம்***' என்று அரும்பதவுரைகளில் பொருள் எழுதப்பட்டுள்ளது. ஸ்ரீரங்கம் ஸ்தாநீகம் பார்த்தஸாரதி அய்யங்கார் ஸ்வாமி தம் திவ்யப்ரபந்த அகராதியில் இந்த ஜந்து சிலந்தியாகலாம் என்று எழுதியிருக்கிறார்.

இப்பொருள் சரியானதா? இந்த ஜந்துவுக்கு ஏன் இப்பெயர் வந்தது?

இது சிலந்தியல்ல. பட்டுப்பூச்சியைப்போலே தான் வெளி வரமுடியாதபடி தன்னைத்தானே கூடுகட்டிக்கொள்ளும் ஓர் ஜந்துவே நம் ஆசார்யர்களால் *'ஸமிதையிடா மாணி'* என்று குறிக்கப்படுகிறது. இதற்கு இப்பெயர் எப்படி வந்தது என்பதை விளக்குவோம் : - தமிழில் வேங்கை என்னும் பதம் வேங்கைப் புலியையும், வேங்கை மரத்தையும் குறிக்கும்; புலவர்கள் தம் நூல்களில் வேங்கைப் புலியையே குறிக்க வேண்டும்போது வேங்கை மரத்தை வேறுபடுத்துவதற்காக, *'பூவாவேங்கை'* என்று குறிப்பர். வேங்கை மரத்தையே குறிக்கவேண்டும்போது, வேங்கைப்புலியை வேறுபடுத்துவதற்காக *'பாயாவேங்கை'* என்று குறிப்பர். இதேபோல் ஓர் பறவையையும், புஷ்பத்தையும் குறிக்கும் பூவை என்னும் பதம் பூவைக் குறிக்க வேண்டும் போது *'பறவாப் பூவை'* என்றும், பறவையைக்குறிக்க வேண்டும் போது *'மலராப் பூவை'* என்றும் குறிப்பர். பறவாப்பூவைப்பூ (பரிபாடல் 3-71) என்று *திருமாலின் திருமேனிக்கு உவமையாகப் பூவைப்பூவைக் குறிக்கும் போது சங்ககால சான்றோர்*"பறவாப்பூவை"*என்று* குறித்திருப்பதைக் காணலாம். "ஸமிதையிடாமாணி" என்பது இதுபோன்ற பிரயோகம். மாணி என்பது ப்ரஹ்மசாரியையும், வெளிவர முடியாத படி தன்னைச் சுற்றித்தானே கூடுகட்டிக் கொள்ளும் (பட்டுப்பூச்சி அல்லது அதுபோன்றதொரு) பூச்சியை யும் குறிக்கும். ஆகையால் பூச்சியையே குறிக்க வேண்டும்போது ஸமிதை எனப்படும் ஸமி த்தை இடும் மாணியான ப்ரஹ்மசாரியை வேறுபடுத்துவதற்காக, *'ஸமிதையிடா மாணி'* என்னும் பதத்தைப் பிரயோகித்து வந்தனர் நம் ஆசார்யர்கள் என்று கண்டுகொள்வது.

82. திருவாய்மொழி ஈடு [4-6-9] வ்யாக்யானத்தில், *'சம்பறுத் தார்க்கைக்குப் போகவேணுமோ'* என்று அருளியிருக்கும் தொடருக்குக் கருத்து என்ன?

தலைவனைப் பிரிந்து மயங்கிய பராங்குச நாயகியின் நோய்க்குப் பரிஹாரம் - கண்ணபிரான் திருவடிகளை வாழ்த்துவதே

என்று சொல்லப்புகுந்த தோழி, முதலில் "*ஏழ்மைப் பிறப்புக்கும் சேமம்*" என்று, அத்திருவடிகள் ஏழேழு பிறப்புக்கும் ரக்ஷையா யிருப்பது என்கிறாள். இதைக் கேட்ட தாயார் "நாங்கள் இவளு டைய நோய்க்குப் பரிஹாரம் கேட்கும்போது, நீ பிறவிதோறும் ரக்ஷையாயிருப்பதைச் சொல்லிப் பயன் என்ன?" என்று கேட்க, இந்நோய்க்கும் ஈதே மருந்து என்கிறாள் தோழி. இவ்விடத்தில் தோழியின் கருத்தை அவளது வாய்மொழியாகவே சொல்லும் போது, "*சம்பறுத் தார்க்கைக்குப் போக வேணுமோ*" என்னும் தொடர் ஈட்டில் உள்ளது. இங்கு "*சம்பு*" என்னும் சொல் ஆனைக் கோரைப் புல் அல்லது ஆனையடிப்புல் என்று சொல்லப்படும் பெரிய புல் வகையைக் குறிக்கும். சம்பு என்னும் ஆனைக் கோரைப்புல்லை அறுத்தபின், அதை ஆர்ப்பதற்கு (கட்டுவதற்கு) வேறொரு கயிறு தேடிப் போகவேண்டுமோ? கயிறு போல் வலிய அந்தப் புல்லிலேயே ஒன்றையெடுத்து அறுத்த புல்லைக் கட்டி விடலா மன்றோ, அதுபோல் ஏழ்மைப் பிறப்புக்கும் சேமமான கண்ணன் கழல் வாழ்த்துவதே இந்நோய்க்கும் மருந்து" என்பது தோழி வாக்யத்தின் கருத்து.

P.T.*ஜானகிராமன், சென்னை – 18.*

**83. கீதையில் '*மாதங்களில் நான் மார்கழி*' என்று கண்ண னால் புகழப்பட்ட மாதத்தை நாம் ஏன் பீடை மாதமாகக் கருதி சுப காரியங்கள் செய்வதில்லை?**

தேவர்களுக்கு ப்ராஹ்மமுஹூர்த்தமாய், ஸத்வகுணம் மிக்க மார்கழி, ஸம்ஸாரத்தைப் போக்கவல்ல எம்பெருமானைப் பற்றிய ஞானம் வளரும் காலமாகையாலே, ஸம்ஸாரிகள் அதைப் பீடை மாதமாகக் கருதி, ஸம்ஸாரத்தை வளர்க்கும் சுபகாரியங் களை அதில் செய்வதில்லை; சாஸ்திரங்களும் விதிப்பதில்லை. எம்பெருமானைப் பற்றிய ஞானத்தை வளர்க்கும் காரியங்களை ஞானிகள் செய்கிறார்கள். அவர்கள் அதைப் பீடை மாதமாகக் கருதமாட்டார்கள்.

**84. 18 புராணங்கள் எவை? அவைகளில் ஸாத்விக, ராஜஸ, தாமஸ புராணங்கள் எவை? இவற்றில் ஸ்ரீவைஷ்ணவன் எவற்றைப் படிக்கலாம்? மற்ற புராணங்களையும் படிப்பதனால் வைஷ்ண வனுக்கு இழுக்கா?**

பாத்மபுராணம் உத்தரகாண்டம் 263ஆவது அத்யாயத்தில் - (1) வைஷ்ணவம், (2) நாரதீயம், (3) பாகவதம், (4) காருடம் (5) பாத்மம், (6) வாராஹம் ஆகிய புராணங்கள் ஸாத்விகம் என்றும் (7) ப்ரஹ்மாண்டம், (8) ப்ரஹ்மவைவர்த்தம், (9) மார்க்கண்டேயம், (10) பவிஷ்யம், (11) வாமனம், (12) ப்ராஹ்மம் ஆகிய புராணங்கள் ராஜஸம் என்றும் (13) மாத்ஸ்யம், (14) கௌர்மம், (15) லைங்கம், (16) சைவம், (17) ஸ்காந்தம் (18) ஆக்நேயம் ஆகிய புராணங்கள் தாமஸம் என்றும் காட்டி, ஸாத்விக புராணங்கள் மோக்ஷத்தையும், ராஜஸபுராணங்கள் ஸ்வர்க்கத் தையும் தாமஸ புராணங்கள் நரகத்தையும் அளிப்பவை என்று கூறப்பட்டுள்ளது. ஆகையால் ஸாத்விக புராணங்களே மோக்ஷத்தை விரும்பும் சான்றோர்களால் படிக்கத்தக்கவை. மனக்கலக்கத்தை விளைக்கக் கூடியவையாகையாலே படிக்கத்தகாத ராஜஸ தாமஸ புராணங்களிலும் உண்மையை அடியோடு மறைக்க முடியாமல் சிலவிடங்களில் உண்மை கூறப்பட்டுள்ளது. இத்தகைய அம்சங்களை விஷ்ணு சித்த விஜயத்தின் புராண பாகத்தின் 2,3 பாதங்களில் *காண்க.*

**85. பகவந்நாம ஸங்கீர்த்தனத்தாலும், திருப்பாவை முதலானவற்றை அநுஸந்திப்பதாலும் முக்காலங்களிலும் நாம் செய்துபோருகிற பாபங்கள் போய்விடும் என்று சொல்லியிருக்கும் போது, இவற்றைச் செய்துவரும் வைஷ்ணவர்களாகிற நாம், பாபங்களின் பலனான துன்பங்களை அநுபவிப்பது எப்படிப் பொருந்தும்?**

"நாமஸங்கீர்த்தனம், திருப்பாவை அநுஸந்த$_4$ானம் முதலா னவற்றால், எம்பெருமானைப்பற்றிய உண்மையறிவுக்குத் தடையா யிருக்கும் *புண்யபாபங்கள்* சிறிது சிறிதாக நீங்கி,

எம்பெருமானைப் பற்றிய உண்மையறிவு உண்டாகி, அவனையே உபாயமாக உறுதிபூண்டு, இந்த ஜன்மத்தின் முடிவில் எம்பெருமானுடைய கிருபையாலே நாம் அநாதிகால மாகக் குவித்து வைத்திருக்கும் மலைமலையான பாபங்களும், *ஞானம் உண்டான பின்பும் அறியாமல் செய்த பாபங்களும் நீங்கப்பெற்று நாம்மோக்ஷம் அடைகிறோம்*" என்பதே ஸகல ஶாஸ்த்ரங்களின் ஸாரம். பிறக்கும் போதே இந்த ஜன்மத்தில் நாம் அநுபவிக்கவேண்டும் என்று விதி₄க்கப்பெற்ற புண்யங்களையும், பாபங்களையும் பொறுமையுடன் அநுபவித்துத்தான் தீர்க்கவேண்டும்.

*திருவேங்கட ராமாநுஜதாஸர், மங்களம். பள்ளி.*

**86. கீதாசரமஶ்லோகத்யையும், அருளிச்செயல் ரஹஸ்யத்துக்கு விவரணமான [வரதாசார்ய ஸ்வாமி தொகுத்த] பூஷண வ்யாக்யானத்தில் 59ஆம் பக்கத்தில் உள்ள விஷயங்களையும் விளக்கவேண்டுகிறேன்.**

"உன்னிடமுள்ள கர்மம், ஜ்ஞானம், ப₄க்தி, முதலான எதிலும் '*இது நம்மைக் கடைத்தேற்றும் உபாயம்*' என்னும் எண்ணத்தை அடியோடு விட்டு, என்னை ஒருவனையே தஞ்சமாகக் கொள்; உன்னை நான் எல்லாப் பாபங்களினின்றும் விடுவித்து என்னை அடைவிக்கிறேன்"என்பது சரமஶ்லோகத் தின் சுருக்கமான பொருள். பூ₄ஷணம் 59ஆம் பக்கத்தில் எடுக்கப்பட்ட பரந்த ரஹஸ்ய ஸ்ரீஸூக்திகளின் பொருளை ஓராசாரியனை அடிபணிந்து அறிந்துகொள்ள வேணுமேயொழிய, அவற்றை ஸுத₃ர்ஶனர் பதிலில் விளக்குவது உசிதமுமல்ல; புரிந்துகொள்ளவும் முடியாது.

V. *ரங்கராஜன், ஸ்ரீரங்கம்.*

**87. மனிதன், மதம் சாதி இவைகளால் பிரிவுற்றிருப் பதன் காரணம் என்ன? ஒரே மதத்தின் கீழே மனிதர்கள் இயங்க முடியாதா?**

**மனிதன்**-அறிவு, பலம், குணம், நிறம், மொழி, செல்வம் முதலான மற்றும் பலவற்றால் பிரிவுற்றிருப்பதற்குக் காரணம் எதுவோ அதுவே இதற்கும் காரணம். அதுவே அவன் அநாதி

காலமாகச் செய்த வினைகள் எனப்படும் புண்ய பாபங்க. கர்மம் காரணமாக வந்த மற்றவற்றை ஒன்றாக்க முடியாததுபோல், மதத்தையும் ஒன்றாக்க முடியாது என்பது சிறிது ஆலோசித்தாலும் விளங்கும்.

**88. இந்தியாவில் மட்டும் சாதிப்பிரிவுகள் உள்ளதன் காரணம் யாது?**

மிகவும் 'முன்னேறி'யிருப்பதாகச் சொல்லிக் கொள்ளும் மேல்நாடுகளில் நிறம் முதலானவற்றால் சமூகத்தினரிடையே பெரிய பிரிவுகளும், பிளவுகளும், போராட்டங்களும் இன்றும் இருப் பதைக் காண்கிறோம். பிரிவு (பேதம்) என்பது கர்மநியதியின் தவிர்க்கமுடியாத விளைவாகும். இது ஒவ்வொரு நாட்டில் ஒவ்வொரு விதமாக வெளிப்படுகிறதாகையாலே, ஏற்கெனவே முக்கியத்துவமிழந்து வரும் சாதிப்பிரிவை நாம் பெரிதுபடுத்த வேண்டிய அவஶ்யமில்லை. சாதிப்பிரிவைப் பெரிது படுத்தி நீக்க முயல்வதால் புதிதாக முளைத்துவரும் பிரிவுகளை நம்மால் போக்கமுடியுமா என்பதைச் சிறிது ஆலோசிக்க வேண்டும்.

**89. சாதாரண தேவதைகளின் கோயில்கள் இவ்வளவு பல்கிப் பெருகியிருப்பதன் காரணமென்ன?**

i) அரசாட்சியில் அரசன் ஒருவன்தான் இருப்பான்; மந்திரி கள் பலர் இருப்பார்கள்; உயர் அதிகாரிகள் ஆயிரக் கணக் கில் இருப்பார்கள்; தாழ்நிலை அதிகாரிகள் லக்ஷக்கணக்கில் இருப்பார்கள்.

ii) Ph.D.போன்ற மிகவுயர்ந்த கல்வியைப் பயிற்றுவிக்கும் இடங்கள் சிலவே இருக்கும்; கல்லூரிகள் அதைவிட அதிகமா யிருக்கும்; உயர்நிலைப் பள்ளிகள் மிக அதிகமாக இருக்கும்; தொடக்கப்பள்ளிகள் மிக அதிகமாக இருக்கும். இவ்விரு உதார ணங்களைக் கொண்டு பார்த்தால், விஷ்ணுகோயில்கள், சிவன் கோயில்கள், பிடாரி, பிள்ளையார், கருப்பு, காட்டேரி முதலானோர் கோயில்கள் ஒன்றுக்குமேல் ஒன்று பதின்மடங்கா யிருப்பதன்

காரணத்தைப் புரிந்து கொள்ளலாம்.

**90. வைணவர்கள் தமிழினை வழக்கில் அதி₄கம் பேணு கின்றனர். இது எதனைக் காட்டுகிறது?**

சங்ககாலத்திலிருந்து தமிழர்கள் வைணவத்தையே மதமாகக் கொண்டிருந்ததையும், வைணவர்கள் வடமொழி யையும், தென்மொழியையும் ஆதிமுதல் இருகண்களாகக் கொண்டிருந்ததையும் காட்டுகிறது.

**91. "இந்துமதம்" என்று ஓர் கலப்பு மதம் உண்டானது ஏன்?**

வேத₃ங்களுக்கும், சாஸ்திரங்களுக்கும் பொருள் கூறு வதில் கருத்துவேற்றுமையாலே,ஆதி₃யில் ஒன்றாயிருந்த வைதி₃க மதம் பலவாகப் பிரிந்தது. ஆங்கில ஆட்சியில், ஆங்கிலேயர்கள் இந்தியாவிலேயே இருந்த இந்த எல்லா மதங்களையும் சௌகரியத்தின் பொருட்டு '***இந்து மதம்***' என்று குறித்தார்கள். இது வேதஶாஸ்திரங்களாகிற ஒரே ப்ரமாணங்களைக் கொண்ட பல மதங்களின் ஸமுதாயமேயொழிய, ஒரு மதமோ, அல்லது கலப்பு மதமோ அல்ல.

இப்போது அத்வைதிகள் தங்கள் மதமே '***இந்து மதம்***' என்று சொல்லிக்கொள்ள இந்துமதம் என்னும்பெயர் சௌ கரியத்தை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது.

**92. திருமண்காப்பின் தத்துவம் என்ன? அதை நெற்றியில் இடுவதன் நோக்கம் என்ன?**

எம்பெருமானுக்கு நாம் அனைவரும் அடிமைப்பட்டவர் கள் என்பது வைணவமதத்தின் அடிப்படைக்கொள்கை. "இது பளிச் சென விளங்கும்படி - முடிந்தால் உடலில் பன்னிரண்டு இடங் களிலும், முடியாவிட்டால் நெற்றியிலாவது எம்பெருமான் திரு வடிவமைப்பில் சுத்தமான வெள்ளை மண்ணைக்கொண்டு திருமண்காப்பும், அத்திருவடிகளுக்கிடையில் பரமமங்களமான பிராட்டி அகலாமலிருக்கிறாள் என்பது தோற்ற, செய்யாளான அவ

ளைக் குறிக்கும் ஸ்ரீசூர்ணமும் உயரநோக்கி இட்டுக் கொள்பவர் கள் உயர்கதிக்குச் செல்வார்கள்'' என்னும் சாஸ்திரத்தை வைண வர்கள் பின்பற்றுகிறார்கள்.

S.G. *சாரி, சென்னை–61.*

**93. ஜயஜயசங்கர என்னும் நாவலில், ஜெயகாந்தன் என்னும் பிரபல நாவலாசிரியர் அந்தணர்கள் வேதமோதுவதைக் கைவிட்டு வருவதால், அரிஜனங்களை வேதமோதுகிறவர்களாக ஆக்க வேண்டிய பொறுப்பு நடமாடும் தெய்வமான சங்கராசாரிய சுவாமிகளிடம் உள்ளது என்னும் கருத்துடைய நாவலை எழுதி யிருக்கிறார். இது நடக்கக்கூடியதா?**

பெரும்பாலான அந்தணச் சிறுவர்களுக்கே வேதமும் வடமொழியுங்கூட வாயில் நுழையாத காலம் வந்துவிட்டது. வேதத்தைக் கொண்டு பணம் பண்ண முடியாது. பணத்திற்கே முக்கியத்துவம் ஏற்பட்டுவிட்ட இக்காலத்தில், ஆயிரம் சங்கரா சாரியர்கள் முயன்றாலும் அரிஜனங்களை வேதமோதுகிறவர் களாக ஆக்கமுடியாது. வெளிப்படையாக விளங்கும் இவ்வுண் மையை அரசியல்வாதிகளும், எழுத்தாளர்களும் மறைத்து, ஜனங் களை ஏமாற்றி பணம் பண்ணிக்கொண்டிருக்கிறார்கள் என்பது இந்நாவலிலிருந்து விளங்குகிறது.

V. *செல்வப்பெருமாள், சென்னை–44.*

**94. முந்தைய கேள்விக்குப் பதிலில் ஆயிரம் சங்கராசாரி யர்கள் முயன்றாலும் ஹரிஜனங்களை வேதமோதுகிறவர்களாக ஆக்க முடியாது என்று எழுதியுள்ளதால் [திருக்குலத்தைச் சேர்ந்த அடியோங்கள் உள்ளம் சிறிது பாதிக்கப்பட்டுள்ளது] பிறந்தவுடனேயே ஒரு திருக்குலத்து மகனை, வேதமோதும் ஜ்ஞாதாக்களின் மத்தியில் வளரவிட்டு அவனுக்கு வேதமுரைத்தால் அவன் ஓதானா?**

ஹரிஜன ஸமூகத்தை வேதமோதும் ஸமூஹமாக ஆக்கிவிட வேண்டும் என்பது ஜெயகாந்தனது நாவலின் கருத்து.

இது இயலாது என்று நாம் எழுதினோம். ப்ராஹ்மண ஸமூகத்தையே வேதமோதும் ஸமூகமாக மறுபடியும் ஆக்க முடியாது என்பது வெளிப்படை. மிக முயன்றால் ஓரிரு ஹரிஜனங்களை வேதமோத வைக்கலாம். அதே முயற்சியைச் செய்தால் நூற்றுக்கணக்கான அந்தணர்களை வேதமோதுபவர்களாக ஆக்கலாம். சாஸ்திரத்திற்கு விரோதமில்லாமல் இதைச் செய்வதைவிட்டு, சாஸ்திரத்திற்கு முரணாக ஒரு ஸமூஹத்தையே வேதமோதுகிறவர்களாக ஆக்கமுயல்வது நடக்காத காரியம் என்பது நம் கருத்து. வேதத்தைக் காட்டிலும் பலவிதங்களில் சிறப்புற்ற திவ்யப்ரபந்தத்தை ஓதி ஞானிகளாவ தற்குத் திருக்குலத்தார்க்குத் தகுதியிருக்கும்போது வேதமோதவேண்டிய அவசியமில்லையே! கனியிருக்கக் கருக்காய் கடிக்கலாமோ?

V. *ஸ்ரீநிவாஸன், திருச்சி-17.*

95. [26-5-77] குமுதத்தில் சத்யமங்கலம் வசந்தமூர்த்தி என்பவர் "உடலுக்குத்தான் அழிவு மனத்திற்கு அழிவில்லை" என்று பகவத் கீதை சொல்லுவதுபோல் வைத்துக் கேள்வி கேட்டிருப்பதையும், அதை அப்படியே ஏற்று அரசு பதில் அளித்திருப்பதையும் பற்றிய தங்கள் கருத்து என்ன?

மனம் என்பது அறிவற்ற அசேதனப் பொருள்; அறிவுள்ள ஆத்மாவாகிற உயிர் விஷயங்களை அறிவதற்குக் கருவியாயிருப்பது. மனம் அழிவற்றது என்று கீதையும், வேறு எந்த சாஸ்திரமும், எந்த மதாசாரியரும் சொல்லவில்லை. ஆத்மாவாகிற உயிர் அழிவற்றது என்பதே கீதை, மற்ற சாஸ்திரங்கள், மதாசாரியர்களுடைய கருத்து. ஆத்மசப்தம் உயிராகிய ஜீவனைக் குறிப்பதோடன்றியில், மனத்தையும் குறிக்கும் (நிகண்டு) வழக்கைத் தழுவி, ஆத்மசப்தத்தால் மனம் சிலவிடங்களில் கீதையில் குறிக்கப்பட்டிருப்பதைக் கண்டு கேள்வி கேட்டவருக்கும் பதில் சொன்னவருக்கும் '*ஆத்மாவும் மனமும் ஒன்றே; ஆகவே மனம் நித்யமானது*' என்னும் மயக்கம் ஏற்பட்டிருக்கக்கூடும். கீதையைத் தக்க பாஷ்யங்களின் உதவிகொண்டு கற்காமல் மொழிபெயர்ப்புக்

களின் உதவிகொண்டு படிப்பதால் வரும் வினை இது.

**96. சென்ற தலைமுறையினரைக்காட்டிலும் இந்தத் தலைமுறையில் மாணவர்கள் படிப்பிலும் ஒழுக்கத்திலும் மிகத் தாழ்ந் திருப்பதற்கு முக்கிய காரணம் என்ன? இதற்குப் பரிஹாரம் என்ன?**

சினிமா எனப்படும் திரைப்படத்தில் மோகமே முக்கிய காரணம். சென்ற தலைமுறையில் திரைப்படங்கள் எண்ணிக் கையில் இவ்வளவு மிகுதியாகவுமில்லை ; தரத்தில் தாழவுமில்லை. பெற்றோர்களும் மாணவர்கள் திரைப்படங்களை மிகுதியாகக் காணாமல் பாதுகாத்துவந்தனர். இப்போது நிலைமை தலை கீழாக மாறிவிட்டது. வாரத்திற்கு ஒரு புதுத்திரைப்படம் (தமிழ்) வருகிறது. இந்தி, ஆங்கிலத் திரைப்படங்கள் ஏராளம். திரைப் படங்களின் தரமும் மிகத் தாழ்ந்துவிட்டது. பாலுணர்ச்சியைத் தூண்டிவிட்டுப் பணம் சம்பாதிப்பதே திரைப்படத் தயாரிப்பாளர் களின் முக்கிய நோக்கமாகிவிட்டது.

பெரும்பாலான பெற்றோர்களே திரைப்படம் பார்க்கா விடில் உயிர் தரிக்கமுடியாது என்னும் இழிநிலைக்கு வந்து விட்டனர். வானொலிப் பெட்டிகளிலும் திரைப்படப் பாடல்களின் ஓலம் வீடுதோறும் தினந்தோறும் ஒலித்துவருகிறது. ஒலி பெருக்கிகளில் தெருக்கள்தோறும் திரைப்படப் பாடல்கள் காதைச் செவிடுபட வைக்கின்றன. சினிமா நடிக நடிகைகளைப் பற்றிய செய்திகளும் பாலுணர்ச்சியைத் தூண்டிவிடும் கதைகளும் ஏராளமாக வெளியிட்டு பத்திரிகைகளும் மாணவர்களின் அறிவையும், ஒழுக்க உணர்ச்சியையும் மழுங்கவைத்து வரு கின்றன. அரசியலிலும் சினிமா மோகமே தலைவிரித்தாடுகின்றது. இந்நிலையில் மாணவர்களின் படிப்பும் ஒழுக்கமும் தாழாமல் என்ன செய்யும்? இதற்குப் பரிஹாரம் பெற்றோர்கள் கையிலேயே உள்ளது.

குழந்தையின் படிப்பு முடியும் வரையில் திரைப்படம் பார்க்கும் பழக்கத்தை முதலில் நாம் கைவிடவேண்டும். குழந்தை களுக்கும் அப்பழக்கமில்லாதபடி வளர்க்கவேண்டும். வீடுகளில்

வானொலிப்பெட்டிகளில் சினிமாப்பாடல்கள் ஓலமிடுவதைத் தடுக்க வேண்டும். கண்டகண்ட பத்திரிகைகளை வாங்குவதைத் தவிர்க்க வேண்டும். இப்படிச் சில பெற்றோர்களாவது செய்ய முன்வந்தால், அடுத்த தலைமுறையில் படிப்பிலும் ஒழுக்கத்திலும் சிறந்த குழந்தைகளை அவ்வீடுகளில் நாம் காணலாம். சமூகம் சீர்திருத்தமடைவதற்கு இதுதவிர வேறு வழியில்லை. விவேகிகளான பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்காக இந்தத் தியாகத்தைச் செய்தாலொழிய மேல்நாடுகளில் உள்ள உலகாயத வாழ்க்கை அடுத்த தலைமுறையில் நம் நாட்டிலும் சீர்திருத்த முடியாதபடி வேரூன்றிவிடும்.

**97. மே கலைமகளில், "*உடலும் உயிரும்*" என்னும் கம்பராமாயண ஆராய்ச்சிக் கட்டுரையில் திரு N.V. நாயுடு அவர்கள் – அரசனை உடலாகவும், குடிகளை உயிராகவும் கூறுவதன் மூலம் "உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்" என்ற கொள்கையைக் கம்பன் மறுத்துள்ளதாக எழுதியுள்ளாரே; இது பற்றித் தங்கள் கருத்து என்ன?**

அரசனை உடலாகவும், குடிகளை உயிராகவும் கூறும் கம்பன், ஓரிடத்தில் குடிகளை உடலாகவும், அரசனை உயிராகவும் கூறியிருக்கிறான் என்பதை திரு.நாயுடு அவர்களே எடுத்து வியப்பைத் தெரிவிக்கிறார். இங்கு உண்மையில் முரண்பாடு இல்லை என்பதை ஆராய்ந்து காணத் தவறிவிட்டார். எல்லா உலகிற்கும் தன்னை ஆத்மாவாக கீதையில் கூறிக்கொள்ளும் கண்ணன், ஓரிடத்தில் ஞானியே தனக்கு ஆத்மா என்று கூறுகிறான். இக்கூற்று ஞானியிடம் கண்ணனுக்குள்ள அன்பின் மிகுதியைக் காட்டுகிறது.

இந்த ரீதியில், குடிகளை உயிராகக் கூறும்போது அரசனுக்குக் குடிகளிடம் உள்ள அன்பின் மிகுதியும், அரசனை உயிராகக் கூறும்போது குடிகளுக்கு அரசனிடம் உள்ள அன்பின் மிகுதியும் காட்டப்படுவதாகக்கொண்டு முரணில்லாமல் பொருளுரைக்கலாம். ***உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்*** என்ற நம்மாழ்வாரை அடியொற்றிக் கம்பன் உலகிற்கும் பரம்

பொருளுக்கும் சரீராத்மத் தன்மையைப் பலவிடங்களில் கூறி யிருக்கும்போது அவன் அதை மறுத்தான் என்று கருத இடமே யில்லை. நடுநிலை நின்று ஆராய்ந்தால் எவர்க்கும் இது எளிதில் விளங்கும்.

**98. ஸ்வாமி நிகமாந்த மஹாதேசிகன், தென்னாசார்யர் களான பல பூர்வீகர்களுடைய அபிப்ராயங்களையே பின்பற்றி யிருக்கிறார் என்று நிரூபிக்க ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் பத்திரிகை ஆசிரியர் அக்கரைப்பட்டிருப்பதாக தார்மிக ஹிந்து புதிய தொகுதி மலர் 1 நாலாம் இதழில் எழுதப்பட்டிருக்கிறது பற்றித் தங்கள் பதில் என்ன?**

விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தின் ப்ரதான ப்ரதிதந்த்ரங்களான சரீராத்மபாவம், பகவத்பரத்வம் ஆகியவற்றில் தென்னாசார்யர்களும், ஸ்ரீவேதாந்ததேசிகரும் ஒரே கருத்து டையவர்களாயினும், அப்ரதானமான பல கொள்கைகளில் கருத்து வேற்றுமையுடையவர்களே; உபய ஸம்ப்ரதாயத்தைப் பின்பற்று கிறவர்களும், தம் ஸம்ப்ரதாயக் கொள்கைகளில் உறுதியிருந்த போதிலும், இதர ஸம்ப்ரதாய ஆசார்யர்களிடம் கௌரவபுத்தி யுடனும் அந்த ஸம்ப்ரதாயக் கொள்கைகளில் சகிப்புத் தன்மை யுடனும் வாழவேண்டும். ஒரு ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த ஆசார்யர், மற்ற ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த ஆசார்யர்களையே எல்லா விஷயங்களிலும் பின்பற்றினார் என வாதம் செய்வது சரியல்ல என்று நமது நூல்களில் நாம் பலகால் எழுதியுள்ளோம். அப்படியிருக்க, ஸ்ரீதேசிகன் தென்னாசார்யர்களுடைய அபிப்ராயங் களையே பின்பற்றியிருக்கிறார் என்று நிரூபிக்க நாம் அக்கரை ப்பட்டிருப்பதாக தார்மிக ஹிந்து ஆசிரியர் எதுகொண்டு எழுதினார் என நமக்கு விளங்கவில்லை.

குறிப்பு: தார்மிக ஹிந்து மாத இதழ் து.க.ஜகந்நாதாசார்யர் ஸ்வாமி 4,வி.எஸ். முதலிதெரு, சென்னை-15. அவர்களை ஆசிரியராகக் கொண்டு மறுபடியும் வெளிவருகிறது.

*K.வரததேசிகன், அட்வகேட், விழுப்புரம்.*

**99. வெளிநாடுகளில் உள்ளதுபோல் நீதிமன்றங்களில் மதத் துறை நடுநிலைமை நம்நாட்டில் உள்ளதா? சில நீதிபதிகள் மதம் மாற்ற முயல்வதும், மதம் காரணமாக பக்ஷபாதமாக நடந்து கொள்வதும் நியாயமா?**

நீதி மன்றங்களில் மதத்துறை நடுநிலைமை வெளிநாடு களில் போல் நம் நாட்டில் பரிபூர்ணமாக இல்லை. ஆயினும், சாதி, மதம் முதலானவை காரணமாக நடுநிலை தவறாத நீதிபதிகளும் பலர் உளர் என்பதை நாம் மறுக்க முடியாது. நீதிபதிகள் மதம் முதலானவை காரணமாக பக்ஷபாதமாக நடந்துகொள்வதோ, மதம் மாற்ற முயல்வதோ நியாயம் என்று நல்லோர்கள் எவரும் கூறமாட்டார்கள்.

*V. ரங்கராஜன், ஸ்ரீரங்கம்.*

**100. பல்வேறுபட்ட தொழில்களில் ஈடுபட்டிருக்கும் பிராம்மண சாதியினருக்கு, அவர்களது நித்ய கர்மங்களை அர்த்தம் புரியாமல் செய்வதால் பலன் கிடைக்குமா?**

அர்த்தம் புரிந்தாலும் புரியாவிட்டாலும் இவை பகவானின் ஆணையினால் அவனது கைங்கர்யமாகச் செயல்படுபவை என்னும் எண்ணத்துடன் இயன்றவரை செய்யப்பட்டால் பகவானு டைய உகப்பாகிற பெரும்பயன் விளையும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆகையால், நித்ய நைமித்திக கர்மங்கள் இயன்ற வரையில் அநுஷ்டிக்கத்தக்கவையே.

**101. இருபதாம் நூற்றாண்டில் நான் பிராமணன் என்று சொல்லிக் கொள்வதில் பெருமை இருக்கிறதா?**

எந்த நூற்றாண்டிலும் ***நான் பிராம்மணன்*** என்றோ, நான் க்ஷத்ரியன் என்றோ, ***நான் வைஷ்ணவன்*** என்றோ சொல்லிக் கொள்வதில் மாத்திரம் பெருமை இல்லை. அப்படிச் சொல்லிக்

கொள்ளலாம்படி அந்தந்த தர்மங்களை இயன்றவரையில் அநுஷ்டிப்பதே பெருமை.

**102. இதிஹாஸங்கள் மூன்று:- 1. சிவபுராணம் , 2. ராமாயணம், 3.மகாபாரதம் என்று வாரியார் கூறிவருகிறார். இது சரியா?**

ஸ்ரீராமாயணமும், மகாபாரதமுமே நம் நாட்டில் ஆயிரக் கணக்கான வருடங்களாக இதிஹாஸங்களாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. இதிஹாஸங்களைக் காட்டிலும் புராணம் வேறுபட்டதாகவே சாஸ்திரங்களில் எடுக்கப்படுகிறது. ஆகையால், 18 புராணங்களில் ஒன்றான சிவபுராணத்தை இதிஹாஸம் என்பது தவறு. சில நூற்றாண்டுகளுக்குள் சைவர்கள் சிவரஹஸ்யம் என்னும் நூலை எழுதிவைத்துக்கொண்டு, அதையும் இதிஹாஸமாகக் கூறிவருகின்றனர். 500வருடங்களுக்கு முற்பட்ட எவருமே அதை இதிஹாஸமாக எடுக்காமையாலும் அதிலிருந்து ஒரு துணுக்கைக் கூடக் கையாளாமையாலும் இதுவும் போட்டியினால் ஏற்பட்ட புதுக்கற்பனையேயாகும்.

**103. நாம் பரமாத்மாவை அடைவதற்கு வழிபார்த்தால் போதுமே; பரமாத்ம துவேஷிகளைப் பற்றிக் கவலைப்படுவது அவசியம்தானா?**

நம் ஸஹோதரர்களும், ஸந்ததிகளும் பரமாத்மாவை அடைய முடியாதபடி, அந்த துவேஷிகள் வழியை அடைத்து விடுவார்களோ என்னும் பயத்தினால் கவலைப்படவேண்டியிருக்கிறது.

**104. பிராம்மணர்கள் ஒடுக்கப்பட்டுவரும் இந்த நேரத்தில் சர்ச்சைகள் மூலம் பிளவுபட்டுவிட்டால், இச்சாதியினர்க்கே கேடாக முடியாதா?**

பொதுஜனப் பத்திரிகைகளில் ஒரு குறிப்பிட்ட மதத்தையோ, தெய்வத்தையோ தாக்காமல், அந்தந்த மதத்திற்காக

ஏற்பட்ட பத்திரிகைகளில் தம் மதத்தின் சிறப்பையும், தெய்வத்தின் பரத் வத்தையும் சர்ச்சை செய்து ஸ்தாபிப்பதால் பிளவுகள் ஏற்படாது. ஆகையால், இவ்விஷயத்தில் தவறு செய்பவை *கல்கி* போன்ற பொதுஜனப் பத்திரிகைகளே. உதாரணமாக விஷ்ணு வுக்குத் தமோகுணம் உண்டு, ப்ரஹ்மஹத்தி தோஷம் ஏற்பட்டது; வீரஹத்தி தோஷம் ஏற்பட்டது முதலான பல பிரசாரங்களைப் பொதுஜனப் பத்திரிகைகளில் காமகோடி பீடாதிபதி செய்ததற்குப் பிறகே, அவை பற்றிய சர்ச்சையில் ஸுதர்சனம் ஈடுபட்டது.

*'அடிமுடி தேடிய கதை' 'கண்ணைப் பிடுங்கி அர்ச்சனை செய்த கதை'* முதலான விஷ்ணு தூஷணக் கதைகளும் *'திருச்சிற்றம்பலம்', 'சேரமான் காதலி'* போன்ற வைஷ்ணவ விரோத நாவல்களும் பொதுஜனப் பத்திரிகைகளில் வெளிவந்ததாலேயே சர்ச்சைகள் கிளம்பின. இப்பத்திரிகைகள் இத்தகைய தவறு களைச் செய்யும்போது உங்களைப் போன்ற நடுநிலையாளர்கள் அவர்களுக்கு எடுத்துக்காட்டி வந்தால், சர்ச்சைகள் மூலம் பிளவு ஏற்படக்காரணமே விளையாது.

105. இறைவனுக்கு உகந்த மொழி வடமொழி என்று வடமொழியைச் சிறப்பாகக் குறிப்பிடுவது பற்றித் தங்கள் கருத்து என்ன?

வைதிக மதத்தின் மூலநூல்களான வேதங்கள் வட மொழியில் அமைந்திருப்பதால் அதற்கு **தேவபாஷை** என்னும் சிறப்பு ஏற்பட்டது. அந்த வேதத்தை விளக்குவதில் தலைசிறந்த திவ்யப்ரபந்தங்கள் தமிழில் அமைந்ததால் தமிழுக்கும் சிறப்பு ஏற்பட்டது. *செந்திறத்த தமிழோசை வட சொல்லாகி* (திருநெடுந் தாண்டகம்-4) என்று ஆழ்வார்களும், *செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே* என்ற ஸ்ரீவேதாந்த தேசிகரும் வடமொழியைக் காட்டிலும் தமிழுக்கே சிறப்புக் கூறியிருப்பதையும், உத்ஸவங்களில் எம்பெருமானுக்கு முன்புறம் அமைத்திருப்பதையும் காணும்போது வைஷ்ணவம் தமிழுக்கே சிறப்பளித்திருப்பது விளங்கும்.

**106. கிறிஸ்தவர்கள் 'பைபிள்' என்ற நூலைப் பின்பற்றுவது போல் வைணவர்கள் எதைப் பின்பற்றுவது?**

ஸமாச்ரயணத்தின்போது நாம் ஆசார்யனிடமிருந்து உபதேசம் பெறும் ரஹஸ்யத்ரயங்களின் பொருளை விவரிக்கும் முமுக்ஷுப்படி அல்லது ரஹஸ்யத்ரய ஸாரத்தை (அவரவர் ஸம்ப்ரதாயத்திற்கேற்ப) ஆசார்யன் மூலமாகக் காலக்ஷேபம் கேட்டுப் பின்பற்றலாம்.

**107. (Brahminism) ப்ராஹ்மண்யம் என்ற ஒன்று உண்டா? இதனைக் கடைபிடிக்க உதவும் நூல்கள் யாவை?**

நாலு வர்ணங்களில் முதலாவது வர்ணம் ப்ராஹ்மண வர்ணம். பகவானுடைய முகத்திலிருந்து இவ்வர்ணம் ஸ்ருஷ்டி காலத்திலேயே படைக்கப்பட்டதாகப் புருஷஸூக்தம் ஓதுகிறது. வேதங்களிலும், ஸ்ம்ருதிகளிலும், இதிஹாஸ புராணங்களிலும் ப்ராஹ்மண வர்ண தர்மங்கள் கூறப்பட்டுள்ளன. ப்ராஹ்மண்யம் என்பது ஒரு மதமல்ல. வைதிக மதத்தைச் சேர்ந்தவர்களில் ஒரு பிரிவினர்க்குரிய தர்மங்களே (அறநெறிகளே) அச்சொல்லால் குறிக்கப்படுகின்றன.

**108. [அ] வைணவ மதத்தின் தனித்தன்மைகள் யாவை? [ஆ] விக்ரஹ ஆராதனை பற்றி வைணவமதம் என்ன கூறுகிறது. [இ] நியமங்கள் முதலியன குறித்து வைணவக் கொள்கை என்ன?**

அ) ஸ்ரீமந் நாராயணனுக்கும் நமக்குமுள்ள ஒழிக்க முடியாத உறவை அறிந்து, அவனையே பரமப்ராப்யமாகவும், மோக்ஷோ பாயமாகவும் உறுதிகொள்பவர்கள் எவராயினும் அவர்களுக்கு அவன் தன் பேரருளாலே தன்னையே அளிக்கிறான் என்பது வைணவத்தின் தனிப்பெருங் கொள்கை. மற்ற மதங்கள் அரும் பாடுபடுபவர்களுக்கே மோக்ஷம் கிடைக்கும் என்கின்றன. வைணவம் உறவையுணர்ந்து உறுதிகொள்பவர்களுக்கு மோக்ஷம் மிக எளிது என்கிறது.

ஆ) இப்படிச் சேதனரை உறவையுணர்ந்து உறுதி கொள்ள வைப்பதற்காக எம்பெருமான் எடுத்துள்ள அவதாரங் களில் தலை சிறந்தவையாக அர்ச்சாவதாரங்களை வைஷ்ணவம் கொள்கின்றது. மற்ற மதங்கள் கோயிலிலுள்ள மூர்த்திகளை வெறும் விக்ர கங்களாகக் கருதுகையில், வைணவம் அம்மூர்த்தி களை அவதாரமாகவே கருதுகையால், விக்ரஹ ஆராதனையே வைணவத்தின் அடிப்படை என்பதை உணரலாம்.

இ) எம்பெருமானுக்கு நாம் அடியார் என்பதைக் காட்டத் திருமண்காப்பையும், அவனது சங்குசக்ரங்களையும் தரிக்க வேண்டியதும், அவ்வுறவை உணர்த்தும் ரஹஸ்யத்ரயங்களையும் முக்கியமாக த்வயத்தையும் அர்த்தத்தோடு அநுஸந்திப்பதும் முக்கியமான நியமங்கள். எம்பெருமானை ஒருகால் மறந்தாலும் மற்றொரு தெய்வத்தைத் தொழாமலிருப்பதும், பாகவதர்களிடம் அபசாரப்படாமலிருப்பதும் ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் அவசியம் கடைப்பிடித்தே தீரவேண்டிய நியமங்கள். இவையில்லாவிடில் வைஷ்ணவத்வமே இல்லை. சந்தர்ப்பச் சூழ்நிலைகளாலும் வாஸனையாலும் தேவதாந்தர ஸம்பந்தமும் பாகவதாபசாரமும் ஏற்பட்டால் மனப்பூர்வமான அநுதாபத்தையும் இவற்றை முயன்று தவிர்க்க வேண்டும் என்னும் எண்ணத்தையும் வைஷ்ணவர்கள் வளர்த்துக்கொள்ளவேண்டும்.

(ஸுதர்சனர் கேள்வி பதில் முதல் பாகம் முற்றிற்று.)



அச்சிட்டோர் :
ஸ்ரீரங்கநாச்சியார் அச்சகம்,
214 கீழை உத்தரவீதி, ஸ்ரீரங்கம், திருச்சி - 620 006.
☎: (0431)-2434398 ✉☎ : akchari@vsnl.com